# ஸ்ரீ ராமாநுஜன் - 288



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 24 | பரிதாவிஞூ புரட்டாசிமீ 15—10—72ல் வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 12 |
|---|---|---|


## ஆண்டு நிறைவு விண்ணப்பம்

அன்பர்களே! நம் ஸ்ரீராமாநுஜனுக்கு இந்த ஸஞ்சிகையோடு இருபத்துநான்காமாண்டு பூர்த்தியடைகின்றது. அடுத்த இதழ் ஐப்பசித் திருமூல மலராகவும் ஐப்பசித் திருவோண மலராகவும் வெளிவரும். அதில் மணவாளமாமுனிகளினுடையவும் பிள்ளை லோகாசாரியருடையவும் ஸ்ரீஸூக்தி வைபவ பரங்களான கட்டுரைகளே வெளிவரும். அடுத்த வருடத்தின் முதல் பத்திரிகை அதுவேயாகும். நமது இப் பத்திரிகை முக்கியமாகப் பேரருளாளன் பெருந்தேவித்தாயார் ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர்களின் திருவருள் கொண்டே நடைபெற்று வருவதாயினும் "ஜங்கம ஸ்ரீவிமாநாநி" என்னும்படியாக விளங்குமவர்களும், *தீதில் நன்னெறி காட்டி யெங்குந் திரிந்து அரங்கனம்மானுக்கே காதல்செய் தொண்டர்* என்னும்படி விளங்குபவர்களுமான பாகவதோத்தமர்களின் அநுக்ரஹமும் அவச்ய ப்ரார்த்தநீயமாகவுள்ளது. ஏற்கனவே நாம் பிரார்த்திக்காமலே ஸ்வயமாக ப்ரஸரித்துவருகின்ற அவ்வநுக்ரஹம் முன்னிலும் அதிகமாகத் தொடர்ந்து செல்லுமென்பதில் நமக்கு ஐயமில்லை. புருஷார்த்தமாகைக்காக ப்ரார்த்திக்கவும் ப்ராப்தமாகையாலே அஞ்ஜலிபந்தம் செய்து நிற்கிறோம். ... ... ... ... *

அயதார்த்தோக்தி ஜாலாநாஂ ஆத்யந்திக விநாசநம்,
யதார்த்தார்த்த ஸம்ருத்திஞ்ச பத்ரிகா கலயேத் இயம்

# அன்பர்கள் அறிந்துகொள்க

பத்திரிகை யாசிரியனென்னும் பெயர் சுமக்கின்ற அடியேன் வற்புறுத்தி விஜ்ஞாபனம் செய்கின்றேன். என்னுடைய ஜரை காரணமாகவும் கண்பார்வைக் குறைவுகாரணமாகவும் பத்ரிகை ஸம்பந்தமான அலுவல்களை நேரிட கவனிக்க முடியாமையினால் இங்கு நான் குறிக்கும் விலாஸத்திற்கே கடிதங்களெழுதுவதோ சந்தாப் பணமனுப்புவதோ செய்யவேணும். (விலாஸம் வருமாறு) ஸ்ரீமான் T. A. அனந்தாழ்வான், B. A., Manager Sri Ramanujan Office, Kancheepuram-3. இந்த விலாஸத்தைக் குறிக்கொள்ளவேணும். இதுதவிர முக்கியமான அறிவிப்பு. கடந்த ஜூன்மாதத்திற்குப் பிறகு சந்தாபணம் அனுப்பினவர்களுக்குப் பத்திரிகை அனுப்பப்பட்டுவரும். அதற்குமுன் அனுப்பினவர்கள் பழைய பாக்கியையும் புது வருஷச் சந்தாவையும் இம்மாத முடிவுக்குள் மேலேகண்ட விலாஸத்திற்கு அனுப்ப வேண்டும். அனுப்பாதவர்களுக்குப் பத்திரிகை கிடைக்க வழியில்லை. பத்திரிகை கிடைக்காமற் போனால் சந்தா அனுப்பாமையினால் நின்றுவிட்டதென்று அவரவர்கள் முடிவு செய்துகொள்ளவேண்டியது. அதைப்பற்றி என்பேருக்கெழுதினால் பதில் கிடைக்காது. 20—11—1972க்குள் பத்ரிகை கிடைக்காதவர்கள் தங்களுக்கு பத்ரிகை நிறுத்தப்பட்டதென்று அறியவேண்டும். ... ... *

# ஸ்ரீ ராமாநுஜ பூஷணம்.

(சுலோகம்)

ஸ்ரீராமாநுஜபத்ரிகாம் அவிரதம் நக்தம்திவம் வாசயந்
தஸ்மாதேவ ச ஸம்ப்ரதாயவிஷயாந் கிஞ்சித் விதன் கச்சந,
ஆசார்யேஷு யதார்த்தபக்திவிரஹாத் ஸ்வைரம் கிமப்யுல்லிகந்
லோகாந் வஞ்சயதீதி கேதமபஹந்த்யேஷா க்ருதிர்மாமிகா.

நமது ஸ்ரீராமாநுஜனில் வெளிவரும் விஷயங்களை அன்பர்கள் ஆதரித்து வாசித்துக் களித்து வருகிறீர்கள். சிலர் பொறாமையினால் இதை தூஷித்து வருவதாகக் கேள்விப்படுகிறோம். அதனால் சில மஹான்கள் வருந்தி நமக்குத் தெரிவித்தமையால் ஸ்ரீ ராமாநுஜ பூஷணம் என்கிற சிறுநூலொன்றை இன்றே வெளியிட்டிருக்கிறோம். வேண்டுமவர்கள் 75 N. P. ஸ்டாம்பு அனுப்பிப் பெறலாம்.

நாளது ஐப்பசி மாதத்தில் வெளிவரப்போகிற ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையில் விரிவான மறுப்புரைகள் வெளிவந்து வம்பர்களின் வாயை அடக்குமாதலால் அப்பத்ரிகையையும் எதிர்பார்த்திருக்க.

ஸ்ரீமாந் ஸ்ரீரங்கரமண: ஸ்ரீவைஷ்ணவஸுதர்சநம்,
யதாயதம் ப்ரபுஷ்ணாது யதார்த்தார்த்த ஸம்ருத்தயே.

இப்படிக்கு,
P. B. ANNANGARACHARYA.

Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் மஹாமஹிமோபாத்யாய
**அண்ணங்கராசாரியர்** எழுதிய

# ஸ்ரீ லோகாசார்ய ஸித்தாந்தஸாரம்

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.


கிடைக்குமிடம்: P. B. ANNANGARACHARYA,
KANCHEEPURAM–3.

ஸ்ரீகாஞ்சீ. வெங்கடேச்வரா பிரஸ்

பரிதாவி ஸம்வத்ஸர புரட்டாசித் திருவோண மலர்.

விலை 2—00] 1972. [தபால் செலவு தனி.

P. B. A. ஸ்வாமிகளின் க்ரந்தமாலா கார்யாலயத்தில்
கிடைக்கக்கூடிய

# பூர்வாசார்ய க்ரந்தங்கள்

## 1. பகவத் ராமாநுஜ க்ரந்தமாலை

*எம்பெருமானு ரருளிச்செய்த ஸ்ரீ பாஷ்யாதி ஸகல க்ரந்தங்களும் ஒரே ஸம்புடம். தெலுங்கு லிபியிலும், தேவநாகர லிபியிலும் தனித்தனி விலை 20—00.*

## 2. பகவத் விஷயம் ஈடு

*ஸம்பூர்ணமான ஈடு முப்பத்தாறுயிரப்படி (தெலுங்கு லிபி) இரண்டு ஸம்புடமாக வுள்ளது. விலை 25—00.*

## 3. ஸஹஸ்ரநாம பாஷ்யம்

*(தேவநாகரலிபி) பட்டர் அருளிச்செய்த பகவத்குண தர்ப்பண மென்கிற வியாக்கியானம். விலை 5—00.*

## 4. ஸித்தித்ரயாதி க்ரந்த சதுஷ்டயம்

*ஆளவந்தா ரருளிச்செய்த ஸித்தித்ரயம் ஆகம ப்ராமாண்யம் கீதார்த்த ஸங்க்ரஹம். நடாதூரம்மா ளருளிச்செய்த தத்வஸாரம். (தேவநாகர லிபி) விலை 4—00.*

## 5. ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை

*மணவாளமாமுனிகளருளிச்செய்த ஸகல க்ரந்தங்களும் (தமிழ் லிபியில்) விலை 35—00. ஷை தெலுங்கு லிபியில் விலை 25—00.*

## 6. த்வாதச ரஹஸ்யங்கள்

*பிள்ளை லோகாசாரியர் அருளிச்செய்த அஷ்டாதச ரஹஸ்யங்களில் மிகு முக்கியமான 12 ரஹஸ்யங்கள்—தெலுங்கு லிபி. விலை 3—00.*

*மற்றும் பலபல நூல்களுக்கு விரிவான கியாடலாக் காண்க.*

GRANTHAMALA OFFICE, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ லோகாசார்ய ஸித்தாந்த ஸாரம்

( முன்தொடர்ச்சி )

## 14. பிராட்டியைப்பற்றின விளக்கங்கள்

12. பிராட்டி திறத்தில் மூன்று வகையான விவாதங்கள் விளைந்திருக்கின்றன. (1) பிராட்டியும் எம்பெருமானைப்போலே உபாய பூதை; (அதாவது) முக்தியளிப்பதில் எம்பெருமானுக்குப்போலே பிராட்டிக்கும் ஸ்வதந்த்ராதிகாரமுண்டு. (2) பிராட்டிக்கு விபுத்வமுண்டு. (அதாவது) எம்பெருமான் ஸ்வரூபம் எப்படி விபுவோ அப்படியே பிராட்டியின் ஸ்வரூபமும் விபு. (3) பிராட்டிக்கும் ஜகத்காரணத்வமுண்டு—என்பதான மூன்று அம்சங்களை நவீநர் கூறுகின்றார்கள். நம் பூர்வாசார்யஸித்தாந்தத்தில் (1) பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்திரமேயுள்ளது. உபாயத்வமில்லையென்றும்; (2) ஜீவநிர்விசேஷமாக அணுத்வமே யுள்ளது, விபுத்வமில்லையென்றும்; (3) ஜகத்ஸ்ருஷ்டியில் பிராட்டி ஸாக்ஷிபூதையே யல்லது ஸாக்ஷாத் ஜகத்காரணத்வம் இவளுக்கு இல்லையென்றும் அருளிச்செய்யப்படுகிறது, கீழே விவரித்தபடி பிறர் கூறுகின்ற மூன்று அம்சங்களும் பிராட்டியின் பெருமையைப் பேசுவனவாதலால் அப்படிப்பட்ட பெருமைகள் அவளுக்கு இல்லையென்று கூற நாம் முன்வரவேண்டிய அவசியமில்லை. *பண்டை நாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங் கொண்டு* என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே பகவத் கடாக்ஷ லக்ஷ்மீகடாக்ஷங்களைச் சேமநிதியாகக்கொண்டு *தைவதம் தம்பதீ ந:* என்று தேசிகனருளிச் செய்தபடியே திவ்ய தம்பதிகளிருவரையும் தைவமாகக் கொண்டிருக்கிற நாம் 'பிராட்டிக்கு உபாயத்வமில்லை, விபுத்வமில்லை, காரணத்வமில்லை' என்று சொல்லப் புறப்படுவது எதற்கு? வஸ்துத: அவை இல்லாமலிருந்தாலும் உண்டென்று பிறர் சொன்னால் வைபவவாதமே பண்ணிப்போரவேண்டிய பக்தர்களுக்கு அதைக்கண்டித்து ஆகவேண்டியது ஒன்றுமில்லையே. அப்படியே சொல்லிக்கொள்கவென்று இருந்தால் ஹாநி யொன்றுமில்லையேயென்று சிலர்க்குத் தோன்றக்கூடும். சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் என்கிற துறையில் உள்ளபடி தத்துவத்தை விளக்கவேண்டுவது விவேகிகளின் கடமை.

13. பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே *ச்ரியம் த்வத்தோபி உச்சைர் வயமிஹ பணாம:* என்று பெருமாளைக்காட்டிலும் பிராட்டியை உயர்த்திக் கூறப்போவதாக ப்ரதிஜ்ஞை பண்ணியே தோத்திரம் செய்ய இழிந்தார். அப்படியே *தவ ஸ்பர்சாதீசம் ஸ்ப்ருசதி கமலே மங்களபதம்* இத்யாதி ச்லோகங்களால் உயர்த்தியே கூறினார். அவற்றால் சாஸ்த்ரார்த்த க்ஷேபமொன்றுமில்லை.

14. தேசிகன் கோதாஸ்துதியில் அற்புதமாகவொரு ச்லோகமருளிச் செய்கிறார். *ரங்கேச்வரஸ்ய தவச* இத்யாதி (21–ச்லோ.) இதில்,* வாசாலயந்தி வஸுதே ரஸிகாஸ் த்ரீலோகீம் ந்யூநாதிகத்வஸமதா விஷயைர் விவாதை:* என்ற உத்தரார்த்தத்திலுறையும் தாற்பரியம் இன்சுவைமிக்கது. ஆண்டாளுக்கும் ரங்கமன்னார்க்கும் மாலை மாற்றல் நடைபெறும்போது ரஸிகர்கள் குழாம்கூடி மூவகையான வாதங்

களைச் செய்து கோஷிக்கின்றார்களாம். பெருமாளைத் தாழ்த்தி ஆண்டாளை உயர்த்திப் பேசுவாரும், ஆண்டாளைத் தாழ்த்திப் பெருமாளை உயர்த்திப் பேசுவாரும், இருவரும் ஏற்றத்தாழ்வு இன்றியே ஸமமாகவே விளங்குகின்றனரென்று பேசுவாருமாய் இங்ஙனே பேச்சுக்கள் அதிகரித்துப் பேரொலியுண்டாயிற்றென்கிறார். எம்பெருமானுக்கு சேஷித்வமும் பிராட்டிக்கு சேஷத்வமும், அப்படியே எம்பெருமானுக்கு ஸகலஜகத்பதித்வப்ரயுக்தமான ஏற்றமும் பிராட்டிக்குப் பத்நீத்வப்ரயுக்தமான தாழ்வும் அபலபிக்கவொண்ணாதவை. ஆகவிப்படி சாஸ்த்ரீயமான ஏற்றத்தாழ்வு இருக்கச் செய்தேயும், ஒரு அபிமாந விசேஷத்தினால் ''ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்'' என்று எம்பெருமானும் சொல்லிவைத்த கணக்கிலே பிராட்டியை உயர்த்தியும் எம்பெருமானைத் தாழ்த்தியும், இருவரையும் ஸமதுலையிலே வைத்தும் ரஸிகர்கள் பேசுவதாக தேசிகன் ஸாதிக்கிறார்.

15. நம் ஆசாரியர்கள் பிராட்டியினிடம் பகை கொண்டவர்களல்லர். அவளுடைய வைபவத்தைக் குறைத்துப்பேச நினைத்தாரொருவருமிலர். அதீந்த்ரியமான விஷயங்களில் சாஸ்த்ரஸித்தமான அர்த்தங்களையே பேணக் கடமைப்பட்டிருக்கிறோம். மோக்ஷப்ரதத்வமோ விபுத்வமோ ஜகத்காரணத்வமோ இவை லக்ஷ்மீவிசிஷ்டனான எம்பெருமானுக்கேயல்லது லக்ஷ்மிக்குத் தனியாக இல்லையென்பதே சாஸ்த்ர ஸம்ப்ரதிபந்நமான ஸத்ஸம்ப்ரதாயம். தேசிகன் திருவுள்ளமும் பெரும்பாலுமிதுவேயாகும். அவர் சதுச்ச்லோகீபாஷ்யத்தில் பல பக்ஷங்களை உபக்ஷேபித்துக்கொண்டு போந்து *பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷு கச்சிதேக: ப்ரமாணவாந்* என்று நிர்ப்பரமின்றிக்கே தலைக்கட்டினார். அதாவது, ''இந்த ஐந்து பக்ஷங்களுள் ஏதாவது ஒரு பக்ஷமே ப்ராமாணிகம்'' என்றார். அவ்வளவோடு நில்லாமல் உத்தரார்த்தம் பணித்தபடி காண்மின்—*ஸபத்நீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்* என்றார். அதாவது, எம்பெருமானுச்குச் சொல்லப்படும் உயர்த்திகளெல்லாம் தனிமைப்பட அவனுக்கல்ல, பிராட்டியோடு கூடியிருந்துள்ளவனுக்கே என்றபடி. ஆகவே மோக்ஷப்ரதத்வாதிகளைப் பிராட்டிக்குத் தனியாக ஸாதிப்பதில் தேசிகனுக்கும் திருவுள்ளமில்லையென்பது விளங்கிற்று.

16. இதற்கு மற்றொரு சான்றும் நன்கு காட்டுகிறோம். காண்மின். யாதவாப்யுதயத்தில் பன்னிரண்டாவது ஸர்க்கம் ருக்மிணிப் பிராட்டி விஷயமென்பது ப்ரஸித்தம். அதில் முதலிரண்டு ச்லோகங்களில் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியே ருக்மிணியாக அவதரித்தமை சொல்லிற்று. மேல் மூன்றாவது ச்லோகம் *சிகண்டகம் நிஷ்ப்ரதிமம் ச்ருதீநாம் ச்ருங்காரலீலோபமவிச்வக்ருத்யம், அதீயதே தந்மிது நம் ஸ்வபாவாத் அந்யோந்ய ஜீவாதுமநந்யபோக்யம்* என்றுள்ளது. அதற்கு மேல் உள்ள ச்லோகங்களெல்லாம் ருக்மிணிப் பிராட்டியை மாத்திரம் பற்றியவை. முதலிரண்டு ச்லோகங்களும் அப்படியே. இடையில் மூன்றாவது ச்லோகமொன்று மாத்திரம் மிதுநம் என்ற நிர்த்தேசமுடையது. இந்த ச்லோகத்தில் *ச்ருங்கார லீலோபமவிச்வக்ருத்யம்* என்கிற இரண்டாவது பாதத்திற்கு *ச்ருங்காரலீலாவத் அநாயாஸஸாத்யவிநோதரூப ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாராதி க்ருத்யம்* என்று வியாக்கியானம்.

இந்த க்ருத்யத்தைப் பிராட்டியினிடத்தில் தனியே பேசக்கூசியன்றோ தேசிகன் மிதுந மென்றிட்டு இடையில் விலக்ஷணமான ச்லோகமொன்றை இயற்றினர்.

17. ஸ்ரீஸ்துதியிலும் *யத் ஸங்கல்பாத் பவதி கமலே யத்ர தேஹிந்யமீஷாம் ஜந்ம ஸ்தேமப்ரலயரசநா ஜங்கமாஜங்கமாநாம், தத் கல்யாணம் கிமபி யமிநாமேக லக்ஷ்யம் ஸமாதௌ பூர்ணம் தேஜ: ஸ்புரதி பவதீபாதலாக்ஷாரஸாங்கம்* என்றார். இந்த ச்லோகமொன்றே லக்ஷ்மீதத்வத்தை நிர்த்தாரணம் செய்யப் போதுமன்றோ. இங்கு லக்ஷ்மியைத் துதிக்க விழிந்த தேசிகன் லக்ஷ்மியினிடத்திலுள்ள தர்மத்தையே யன்றோ கூறித் துதிக்கவேணும். இங்கு எங்ஙனம் துதித்திருக்கிறாரென்று பார்க்க வேணும். லக்ஷ்மியினிடத்தில் தனிப்பட இல்லாத தர்மத்தை அவளிடத்துள்ள தாகக் கூற எங்ஙனம் துணிவர்? *ஜங்கமாஜங்கமாநாம் ஜந்ம ஸ்த்தேம ப்ரலய ரசநாம் இந்திரே த்வம் கரோஷி* "ஸ்ரீ மஹாலக்ஷ்மியே! நீரே ஜங்கம ஸ்தாவரங்களி னுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கிறீர்" என்று வைத்து ச்லோக மியற்றலாமே; அப்படியியற்றவில்லை காணீர். அந்த ஜந்மஸ்தேம ப்ரளய ரசனை யானது பரமபுருஷனுக்கே யுள்ளதென்றும் தததநுக்ராஹகத்வமேவ இவளிடத்துள்ள தென்றும் ஆழ்வான் பட்டர் முதலானோர் *ஸ்வஸ்தி ஸ்ரீர்திசதாதசேஷஜகதாம் ஸர்கோப ஸர்கஸ்த்திதீ: ஸ்வர்க்கம் துர்கதிமாபவர்கிகபதம் ஸர்வம் ச குர்வந் ஹரி:, யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தேகிலம்* *யத்ப்ரூபங்கா:ப்ரமாணம் ஸ்த்திரசரரசநாதாரதம்யே முராரே:* என்பவை முதலான ஸ்ரீஸூக்திகளால் நன்கு காட்டியுள்ளார்களென்பதை யுணர்ந்த தேசிகன் வேறு வகையாக எங்ஙனே பணிக்கக்கூடும்?

18. ஸ்ரீ பாஷ்யத்தில் *விநத விவிதபூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே* என்றவிடத்து ச்ருதப்ரகாசிகையில் *ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வே ஹி ராஜ்ஞ: ச்சத்ர சாமர வத் ப்ரஹ்மண: அஸாதாரணசிஹ்நம்* என்றருளிச் செய்யப்பட்டது. அந்த ஸ்ரீ ஸூக்தியை யநுஸரித்தே தேசிகனும் ரஹஸ்யத்ரயஸாரத்தில் பரிபூர்ண ப்ரஹ்மாநு பவாதிகாரத்தில் — "ஈச்வரனுக்கு சத்ரசாமராதிகளைப்போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வ லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிநியதங் கள்" என்றார். இந்த மஹா வாக்யத்தில் ஜகத் காரணத்வத்தை முதலிலே வைத்து லக்ஷ்மீஸஹாயத்வத்தை முடிவிலே வைத்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. லக்ஷ்மீ ஸஹாயத்வமானது எப்படி லக்ஷ்மியினிடத்தில் ஸம்பவியாதோ அப்படியே ஜகத் காரணத்வமும் அவளிடத்தில் ஸம்பவியாது, பரப்ரஹ்மத்திற்கே ஸம்பவிக்கும்— என்று விளக்கினபடி.

19. ந்யாயஸித்தாஞ்ஜநத்திலும் ஜீவபரிச்சேதத்தில் *ஸ்ருஷ்ட்யாதிஜகத் வ்யாபாரமோக்ஷப்ரதத்வ முமுக்ஷூபாஸ்யத்வ ஸர்வசேஷித்வாதிரூப பகவத ஸாதாரணதர்ம.........* இத்யாதிவாக்யத்தால் இவ்வர்த்தந்தன்னையே பிரதிபாதித் தார். முநிவாஹந போகத்திலும் முதற்பாட்டின் வியாக்கியானத்தில் [ஆதி] ஸர்வஜகதேக காரணபூதன்.........இக்காரணத்வமும் மோக்ஷ ப்ரதத்வமும் சத்ர சாமரங்கள் போலே ஸர்வலோக சரண்யனுக்கே விசேஷ சிஹ்நங்கள்" என்று

பணித்தார். இத்தகைய ப்ரமாணகதிகள் பலபலவுள்ளன. இனி நாம் இவ்விஷயங்களை ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டு ஸித்தாந்தத்திலுள்ள உபபத்திகளை மூதலிப்போம்.

20. முதலில் பிராட்டியின் உபாயத்வத்தைப்பற்றிப் பேசுவோம். மந்த்ர ரத்நமென்று புகழ்பெற்ற த்வயமென்னும் ரஹஸ்யமானது பூர்வகண்டமென்றும் உத்தரகண்டமென்றும் இரண்டு கூறுகளாகவுள்ளது. இவ்விரண்டு கூறுகளிலும் ஸ்ரீமத் பதம் இருந்துகொண்டு நாராயணனுக்கு லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்டியிருக்கின்றது. பூர்வ கண்டத்தில் பிராட்டியை முன்னிட்டு [அதாவது பிராட்டியை புருஷகாரமாகக் கொண்டு] எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறதென்றும், உத்தரகண்டத்தில் பிராட்டியும் பெருமாளுமான சேர்த்தியிலே அடிமைசெய்ய அர்த்திக்கிறதென்றும் ஸமகண்டமாக ஸகலாசார்யர்களும் நிர்வஹித்தருளியுள்ளார்கள்.

21. மோக்ஷமளிக்கு மாற்றல் [அதாவது மோக்ஷப்ரதத்வமாகிற உபாயத்வம்] பிராட்டிக்கும் உண்டென்று பிறர் சொல்லுவதாக ஒரு ப்ரஸ்தாவம் உள்ளதானது மிகவும் அஸ்தாநே. ஏனெனில், பிராட்டிக்குப் புருஷகாரத்வத்தை யிசைந்துவிட்டால் அவளுக்கு உபாயத்வமுமுண்டென்று வாய் திறக்க வழியேது? இருளும் ஒளியும் ஓரிடத்தில் ஒன்று சேர்ந்திருக்கமாட்டாதது போலவே புருஷகாரத்வமும் உபாயத்வமும் ஒரு வ்யக்தியில் ஒன்று சேர்ந்திருக்க முடியாதே.

22. எம்பெருமானைப் போலே பிராட்டியும் முக்தி ஸாம்ராஜ்யத்தை அருளவல்லவளாகில் இவள் புருஷகாரக்ருத்யத்திலே கை வைத்துத் துவளவேண்டிய அவசியமே யிருக்க மாட்டாதே. ஒரு பொருளை ஸ்வயமேவ அளிக்க சக்திவாய்ந்த வ்யக்தி அப்பொருளைக் கொடுப்பிக்க மற்றொருவரிடத்தில் ப்ரயாஸப்பட ப்ரஸக்தியுண்டோ? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமென்று உணருவதில் என்ன ச்ரமம்?

23. உலகத்திலும் பார்க்கலாம். ஒரு பொருளைக் கொடுப்பிக்கிறவராக ஒருவர் ஏற்பட்டால் அவர்தாமே அந்தப் பொருளை ஸ்வயம் கொடுக்கவல்லவராகவும் இருக்கமுடியாது. சிபார்சு செய்கிறவர் என்று ஒருவரை நாம் ஒப்புக்கொண்டால், அவருக்கு சிபார்சு செய்கிற தொழில் ஒன்றுதான் பொருந்தும். எந்த வஸ்துவுக்காகச் சிபார்சு செய்கிறாரோ அந்த வஸ்துவை அவரே கொடுக்கவும் வல்லவர் என்று சொல்லுவதானது அர்த்தமில்லாத வார்த்தையேயாகும். அந்த வஸ்துவைத் தாமே கொடுக்க வல்லவரானால் அவர் இன்னொருவரிடத்தில் சென்று சிபார்சு செய்கிற வருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேமாட்டார், சிபார்சு செய்வதென்பது பர்யாயமாய் யாசகத் தொழிலேயாகும். தாமே கொடுக்க ப்ராப்தியில்லாதவரே பிறரிடம் சென்று 'இதை நீ கொடுக்கவேணும்' என்று இரக்கக்கூடும்.

24. 'பிராட்டிக்குப் புருஷகாரத்வமில்லை, உபாயத்வம் மாத்திரமேயுள்ளது' என்று சொல்லுவதானால் அது ஒருவாறு பொருந்தும். புருஷகாரத்வத்தை அவளுக்கு இசைந்து கொடு நின்ற பின்பு கூடவே உபாயத்வமும் உண்டென்று வாய் திறக்கவுண்டோ வழி?

25. நம்மைப் போன்ற ஆர்த்தர்கள் திறத்தில் எம்பெருமானைக் காட்டிலும் பிராட்டிக்கே காருண்யம் கனத்ததென்பது விவாதமற்ற விஷயம். இத்தகைய காருண்யமுள்ள பிராட்டி தனக்கே முக்தியளிக்க வல்லமையுமிருக்குமாகில் அந்த முக்தியைத் தானே அளித்திடாமல் நிரங்குச ஸ்வதந்த்ரனை பகவானிடத்தில் புருஷகாரஞ்செய்து மன்றாடுவது ஏதுக்காகவென்று சிந்திக்கவேண்டுமே விவேகிகள்.

26. எம்பெருமான் ஒருநாளும் புருஷகாரக்ருத்யத்தில் கை வைப்பதில்லை யென்றும் இத்தொழிலை எப்போதும் பிராட்டியே நடத்திவருகிறாளென்றும் ப்ரஸித்தமாகவுள்ளது. இதனை ஊன்றி நோக்கினாலும், புருஷகாரத்வமே பிராட்டிக் குள்ளதென்னும் தத்துவம் நன்கு உணரப்பட்டதாகும். புருஷகாரத்வமாவது தாபயித்ருத்வம்—கொடுப்பித்தல். உபாயத்வமாவது தாத்ருத்வம் — தானே கொடுத்தல். இவ்விரண்டும் ஏகவஸ்துவிஷயகமாய் ஏகவ்யக்தியில் இருக்கமுடியா தென்பதைத் திடமாக நெஞ்சிற் கொள்ளவேணும்.

27. ஸ்ரீவசநபூஷணத்தில் "புருஷகாரக்ருத்யத்தையும் உபாயக்ருத்யத் தையும் தானே ஏறிட்டுக் கொள்ளுகையாலே" என்றொரு ஸ்ரீஸூக்தி காண்கிறதே, அது என்ன? என்று ஒரு சங்கை தோன்றவுங் கூடும். கேண்மின்; எம்பெருமான் பிராட்டியின் புருஷகாரத்தை யெதிர்பாராமல் தானே காரியஞ் செய்தானென்பதை யன்றோ அந்த ஸ்ரீ ஸூக்தி சொல்லுகின்றது. எம்பெருமான் பிறரொருவரிடத்துச் சென்று புருஷகாரஞ் செய்ததாக இங்கு விவக்ஷிதமே யல்ல. மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் ஸேவித்தும் தெளியலாம். ஆகவே புருஷ காரத்வமும் உபாயத்வமும் ஏகவ்யக்தியிலே கூடமாட்டாதென்பது கல்வெட்டு.

28. த்வாதசியன்று ஸூர்யக்ரஹணம் நேர்ந்தால் பாரணைக்கு ப்ரா தாந்யமா? உபராக ப்ரயுக்தமான உபவாஸத்திற்கு ப்ராதாந்யமா? என்று ஒருவர் தர்மஸந்தேஹம் கேட்க, த்வாதசியாகையாலே பாரணைக்குத்தான் ப்ராபல்யம் என்று ஸஞ்சிகை யெழுதுவாருளர். த்வாதசியன்று க்ரஹணம் நேருவதெப்படி யென்கிற விசாரத்தில் அந்தோ புத்தி செல்லுவதில்லை. அதுபோலவே இவ்விஷயத் திலும், நியமேந வ்யதிகரண தர்மங்களான புருஷகாரத்வ உபாயத்வங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் எங்ஙனே கூடும்? என்று இந்த மிகச் சிறு விஷயத்தை ஆராயகில்லாது வாத விவாதங்களை வளர்த்துகின்றார்களென்றால் இதனிலும் மிக்க வியப்பு வையகத்திலுண்டோ?

29. சதுச்ச்லோகியில் மூன்றாவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் தேசிகன் இவ்வளவு விஷயங்களையும் திருவுள்ளத்தில் அமைத்துக் கொண்டு அழகாக அருளிச் செய்கிறார் காண்மின்:— *மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்* என்பது அவ்விடத்து ஸ்ரீ ஸூக்தி. 'எம்பெருமான் தான் மோக்ஷமளிப்பவன்; அதனைப் பெறுவிப்பவளாக மாத்திரம் பிராட்டி இரா நின்றாள்' என்பது இந்த ஸ்ரீ ஸூக்தியின் கருத்து. அதற்குமேலுள்ள ஸ்ரீ ஸூக்தி களும் பிராட்டிக்கு உபாயத்வமில்லை யென்பதையே நிலைநாட்டுவன.

30. உலகத்தில், கொடுப்பிக்கின்ற மஹான்களையே ஸாக்ஷாத் கொடுப்பவர்களாகவும் புகழ்ந்து கூறுகிற முறை உண்டாதலால் அவ்வண்ணமாகவே பிராட்டி விஷயத்திலு மாகலாமே யென்னில், இது மிகவும் ஸமஞ்ஜஸமான வாதம். *ச்ரியம் லோகே தேவஜுஷ்டாமுதாராம்*, *ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம் வா கஸ்மை சிதஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய* இத்யாதிப்ரமாணங்களைப் பின்சென்று அழகாகச் சொல்லக்கூடிய வார்த்தை இதுவே. இந்த நிர்வாஹமே தேசிக ஸூக்திகளோடு நன்கு பொருந்தும்.

31. தேசிகன் ரஹஸ்ய ரத்நாவளியிலே "ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வஜீவர்களுக்கும் தஞ்சம்......ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்." என்றார்.

32. ந்யாயஸித்தாஞ்ஜநத்தில், *இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா* என்றது ப்ரஸித்தம். லக்ஷ்மீநாதனை உபாயமாகக் கொள்வதுதான் ப்ரபத்தியின் வேஷமென்று இதில் நன்கு காட்டப்பட்டது. லக்ஷ்மீததீசோபாயத்வாத்யவஸாயாத்மிகா த்வியம்* என்று எளிதாகச் சொல்லலாமாயிருக்க அங்ஙனம் சொல்லாது விட்டது ஆராயத்தக்கது. இப்படிப்பட்ட ஸூக்திகள் பல்லாயிரம் கிடைக்கும். ஸதாசார்ய ஸூக்தி ரக்ஷா முதலிய நூல்களிலே மிகவிரிவாக உரைத்துளோம்.

33. மோக்ஷமென்னும் பொருளானது பிராட்டியும் பெருமாளுமாகிய இருவர்க்கும் உரித்தான ஸொத்தாதலால் பிராட்டி தானொருத்திதானே அதனை அடியார்க்கு அளிக்கக் கூடாதாகையால் ஸ்வதந்த்ரமாகக் கொடுத்தருள விரும்பாதவளாய் புருஷகார க்ருத்யத்திலே கைவைக்கிறாளென்றும் ஆகவே இதனால் அவளுடைய உபாயத்வத்திற்குக் கொத்தையில்லை யென்றும் நவீநர் சொல்லுகிற வாதமொன்றுண்டு. இதைப்பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டியதை உணர்த்துகிறோமிங்கு. முக்திச்செல்வம் திவ்யதம்பதிகளிருவர்க்கும் ஸொந்தமானது என்றே யிருக்கட்டும். எம்பெருமான் தனக்கேயுரித்தான பொருளைப் பிராட்டிக்கும் உரித்தாக்கி வைக்கிறா னென்பது உண்மை. தனக்கே ஸொந்தமான பொருளில் தன் மஹிஷிக்கும் உரிமையை ஏற்படுத்திவைப்பது உலகத்திலும் கண்ட விஷயமாதலால் இதுகொண்டு விவேகிகள் மயங்க வொண்ணாது.

34. *ந தஸ்யேசே கச்சன *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்* இத்யாதி ச்ருதிஸித்தமான நிருபாதிகஸர்வஸ்வாமித்வத்தையுடைய எம்பெருமான் தனது உடைமையைப் பிராட்டிக்கு உரிமைப் படுத்துவதுபோலவே ஆழ்வாராசாரியர்களுக்கும் உரிமைப்படுத்தி வைக்கிறா னென்பது நிர்விவாதம். இல்லையேல் *பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ* என்னமாட்டாராழ்வார். *தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ* என்கிறார் ந்யாஸதிலகத்தில் தேசிகன். திருநாடு தன்னுடைய ஸொத்தாகவே யிருந்தாலும் அதனைத் தன்னடியார்களிட்ட

வழக்காகவும் ஆக்கிவைத்திருக்கிறு னெம்பெருமான்— என்னுமிடம் இந்த ச்லோகத்திறைல் ஸூவ்யக்தம். நிஜம் பதம் என்றதனுல், உண்மையில் பரமபதம் எம்பெருமானுடைய ஸொத்தென்பது காட்டிற்ருயிற்று. தன்னதான அந்த ஸொத்தை அடியார்களுக்குக் கொடுக்கும்போது ஆசாரியர்களின் கட்டளையை எதிர்பார்த்தே கொடுக்கிருனென்பதை [நேசிகாதேசகாங்க்ஷீ ஸந் தத்தே] என்றதனுல் சொல்லுகையாலே அந்த ஸொத்தைத் தானே ஆசாரியர்களிட்ட வழக்காக ஆக்கிவைத்திருக்கின்ருனென்பதும் பெறலாயிற்று. பிராட்டியின் நியமனங்கொண்டும் ஆசாரியர்களின் நியமனங்கொண்டும் எம்பெருமான் முக்தியளிக்கின்ரு னென்பது ஸர்வாசார்ய ஸம்ப்ரதிபந்நம். ஆகவே பிராட்டிக்குச் சொல்லுகிற உபாயத்வம் ஆசாரியர்கட்கும் சொல்லப்பட வேண்டியதேயாகும். மோக்ஷப்ரதாநத்திற்குரிய பகவத் க்ருபையை உத்தேஜநம் செய்யும் விஷயத்தில் ஆசார்யரோடு பிராட்டியோடு வாசியில்லை. ஆசாரியர்களுக்கும் உபாயத்வம் ஸம்மதமே யென்னில், எம்பெருமானும் உபாயம், ஆசார்யனும் உபாயம், பிராட்டியும் உபாயம் என்றதாகத் தேறிநிற்கும். இதை ஔசித்யாநுஸாரமாகப் பரிஷ்கரிக்க வேண்டில், எம்பெருமானெருவனே உபாயம்; பிராட்டியும் ஆசார்யனும் புருஷகாரபூதர்கள் என்கிற பரிஷ்காரமே தஞ்சமாகும்.

34. உபாயத்வமாவது *மோக்ஷார்த்தபரஸ்வீகர்த்ருத்வம்* என்பதாகச் சிலர் எழுதுகிருர்கள். அங்ஙனமே இசைவோம். முமுக்ஷுவான சேதநன் ஏறிடுகிற பரம் ஆசார்யனிடத்திலுமுண்டு, பிராட்டியிடத்திலு முண்டு, எம்பெருமானிடத்திலு முண்டு. ஆனுல் இவை துல்ய ரூபங்களல்ல, வெவ்வேறு வகைப்பட்டவையென்பது விவரிக்க வேணுமோ? பரஸ்வரூபம் மிதோவிபிந்நமேயாகும். பரஸ்வரூபம் பேதிக்கும்போது தத்ஸ்வீகர்த்ருத்வரூபமான உபாயத்வமும் பேதித்தே தீரும். சரணுகதிகத்ய பாஷ்யத்தில் தேசிகன் பணித்த சில ஸூக்திகள் காண்மின்;—

*க்ருத்ஸ்நமிதம் கத்யம் த்வயவிவரணமிதி ஸாதீயாந் ஸம்ப்ரதாய:. இஹ ச பகவத்ப்ரபதநே ஸமுத்யதஸ்ய ஸம்யக்ஜ்ஞாந ஸம்பாதந புருஷகார புரஸ்காராதிகம் பூர்வக்ருத்யம். ஸாங்கஸ்வரக்ஷாபர ஸமர்ப்பணம் தத்காலக்ருத்யம். ஸ்வநிஷ்டாநுஸந்தாநபூர்வகம் ஸ்வாதிகாரோசித கைங்கர்யாதிகமுத்தர க்ருத்யம். சரண்யஸ்ய து பூர்வக்ருத்யம் புருஷகாரப்ரரோசநாதிகம். தத்கால க்ருத்யம் ஸமர்ப்பித ஸர்வபரஸ்வீகரணம். உத்தரக்ருத்யம் து......முக்திப்ரதாந பர்யந்தம்* என்றுள்ள அவ்விடத்து ஸ்ரீ ஸூக்திகளை உட்புகுந்து பரிசீலித்தால் உண்மை தெரியவரும்.

35. *மோக்ஷப்ரதாநௌபயிக ஸங்கல்பாச்ரயத்வம் உபாயத்வம், பகவத் கருணுவிஷயீகார காரகத்வம் புருஷகாரத்வம்* என்கிற பரிஷ்காரம் நிரவத்யம். அதாவது—மோக்ஷமளிக்கக் கடவேனென்று ஸங்கல்பித்துக் கொள்ளுகை உபாயத்வம். எம்பெருமானுடைய அருளுக்கு இலக்காகச் செய்கை புருஷகாரத்வம் என்க. ஆகவே ஆசார்யரிடத்திலும் பிராட்டியிடத்திலும் புருஷகாரத்வமும் எம்பெருமானிடத்தில் உபாயத்வமும் வ்யவஸ்திதம்.

36. எம்பெருமானுக்கு மோக்ஷப்ரதத்வமில்லை, அது ஆசார்யனுக்கே உள்ள தென்றும் எம்பெருமானுடைய மோக்ஷ ப்ரதத்வத்திற்காட்டிலும் ஆசார்யனுடைய மோக்ஷப்ரதத்வமே சீரியதென்றும் அருளிச்செய்கிற புடைகளும் க்ரந்தங்களிலுண்டு, இராமானுச நூற்றந்தாதி முதலியவற்றில் இது பரக்கக் காணலாம். நூற்றந்தாதியில் *ஞானங்கனிந்த நலங்கொண்டு* என்கிற பாசுரத்தில் "இராமானுசன் தன்னை யெய்தினர்க்கு அத்தானங் கொடுப்பது தன்தகவென்னும் சரண் கொடுத்தே" என்பதனுல், ஆசார்ய ஸார்வபௌமரான எம்பெருமானார் தாமே முக்தி யளிப்பதாகவும் அதுதான் மிகச் சீரியதென்றும் ஸுவ்யக்தமாக அருளிச்செய்யப்பட்டுள்ளது. இதனுல், எம்பெருமானைத் தவிர்த்து எம்பெருமானார் தனியே ஒரு மோக்ஷக்கடை வைத்திருக்கிறதாக அர்த்த மாகுமோ? எம்பெருமானார் வழியாகப் பெறும் மோக்ஷமே சீரியது என்பதொன்றேயன்றே இங்கு விவக்ஷிதம். இதுபோலவே பிராட்டி வழியாகப் பெறும் மோக்ஷத்தின் சீர்மையைக் காட்டும் பிரமாணங்களினுல் கலங்குவது தகாது.

37. நம்மாழ்வார் திருவாய்மொழிதோறும் நிகமனப் பாசுரத்தில் ஒவ்வொரு பலன் அருளிச் செய்து வருகிறுர். அவ்வடைவில் ஒரு திருவாய்மொழிக்குப் பலனருளிச் செய்யும்போது *ஆயிரத்துளிப்பத்தால், வேரிமாருத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே* என்றுர். 'இப்பத்தை ஓதினுல் பிராட்டி வினைதீர்க்கும்படியாக நேரும்' என்றபடி. நாம் எம்பெருமானுடைய அருளுக்கு இலக்காக வொண்ணுதபடி இடையூருயிருந்த தீவினைகளைப் பிராட்டி போக்கியருளுவள் என்பதுதான் இதன் கருத்து. இதைப் பன்னீராயிரப்படி உரைகாரரர் எடுத்துக் காட்டுகிறுர். பெரிய வாச்சான் பிள்ளையும் வடக்குத் திருவீதிப் பிள்ளையும் இங்கு இன்சுவையே வடிவெடுத்ததாம்படி அதிகமாகவும் வியாக்கியான மருளியுள்ளார்கள்:—

"ஸர்வேச்வரன் பலன் கொடுக்கிற தசையிலே அவனை விலக்கி நானேயிதுக்குப் பலன் கொடுக்கவேணும் என்று தனக்கு பரமாக ஏறிட்டுக் கொண்டு பெரிய பிராட்டியார் பலன் கொடுக்கும்" என்று அவ்வாசிரியர்களின் திவ்யஸூக்தி. அங்கு முன்னேயும் பின்னேயுமுள்ள ஸ்ரீ ஸூக்திகளையும் சேர நோக்கி ரஸிக்கவேண்டும். அதுக்கு சக்தியின்றிக்கே இந்தப் பாசுரத்துணுக்கையை எடுத்துக் காட்டி 'இதனுல் பிராட்டிக்கு உபாயத்வம் தெரிகின்றது காணீர்' என்பார்க்கு நாம் என் சொல்லுவது? *வேரி மாருத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே* என்றருளிச்செய்த ஆழ்வார்தாமே* ஆயிரத்துளிப்பத்தும் அருவினை நீறு செய்யுமே* *இவை பத்தும் கெடலில் வீடு செய்யும் கிளர்வார்க்கே* *இப்பத்தும் வானின் மீதேற்றியருள் செய்து* *இப்பத்தும் மேலை வைகுந்தத்திருத்தும்* என்றிப்படி பல பாசுரங்களினுல் ஒரு பத்துப் பாசுரந்தானே ஸாக்ஷாத்தாக மோக்ஷத்தையளித்திடு மென்றும் அருளியுள்ளார். இங்ஙனே, பாசுரங்களே ஸ்வயம் மோக்ஷ ஸாதனமாகின்றன வென்றுல் இதற்கு அர்த்தமென்ன? எம்பெருமானது திருவுள்ளத்தில் சீற்றத்தை யாற்றி ப்ரஸாதத்தையுண்டு பண்ணும் முகத்தால் இவை ஸாதனங்களாகின்றன என்று தானே அர்த்தமாகும். இவ்வண்ணமாகவே பிராட்டியும் செய்து போருகிருளென்பதேயன்றே பரமார்த்தம்.

38. சரணாகதிகத்யத்தில் *ச்ரியம் தேவீம்* என்றவிடத்து பாஷ்யத்திலே ஸ்ரீ சப்தார்த்த நிருக்திகளை நிரூபித்தபின் *ஸ்ரீபதநிருக்திபி: ஸம்ச்ரிததோஷநிராகரணம், ப்ராப்யருசி ப்ராபகாத்யவஸாயாதிப்ரதாநம், உபாயஸ்வரூப நிர்வர்த்தகத்வம், பதிப்ரஸாத ஜநகத்வம் ச ஸித்தம்* என்றார் தேசிகன். வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்கும்படிகள் இவையன்றோ.

39. *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி: மமாபிசமதம் ஹ்யேதந் நாந்யதா லக்ஷணம் பவேத்* என்பது முதலான பகவச்சாஸ்த்ரவசனங்களின் படியே ஸர்வஸம்ப்ரதிபந்நமாகப் பிராட்டிக்குப் புருஷகாரத்வம் உள்ளபோதே அத்தோடு உபாயத்வமும் உடன் சேர்ந்திருக்க முடியாதென்கிற பரமார்த்தமொன்றே இவ்விஷயத்தில் முக்கியமானது. மற்ற வாதங்களெல்லாம் வீண் க்ரந்த விஸ்தரமே யென்னலாம்.

40. சதுச்ச்லோகியில் மூன்றாவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் தேசிகன் பேசியிருப்பதொரு காரிகையொன்றே தத்வார்த்த முணர்த்தவற்று; அதாவது *அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே* என்பது. இதன் பொருளாவது. பலன் அளிப்பவன் எம்பெருமானே; பிராட்டி செய்தருளும் கார்யம் ஏதென்னில், அப்பெருமான் நிக்ரஹோந்முகனாயிருக்குங் காலத்தில் நிக்ரஹேச்சையைத் தவிர்க்கப் பார்ப்பதும், அநுக்ரஹோந்முகனாயிருக்கிற காலத்தில் அவ்வநுக்ரஹத்தை இன்னும் பெருகச் செய்யப் பார்ப்பதும் ஆகிய இவையே பிராட்டி செய்யும் செயல் என்பதாம். சாஸ்த்ரார்த்த மருமத்தை இங்ஙனே நிஷ்கர்ஷித்துப் பேசியிருக்க, பிராட்டிக்கும் உபாயத்வமுண்டென்கிற வாதம் எங்ஙனே பொருந்தும்? எம்பெருமானுக்கு உபாயத்வமும் பிராட்டிக்குப் புருஷகாரத்வமுமே வ்யவஸ்திதமென்று நிஷ்கர்ஷிப்பதே நிஷ்கண்டகமான ஸத்ஸம்ப்ரதாயமென்று தேறிற்று.

41. ஜகஜ் ஜந்மாதி காரணத்வமானது பரப்ரஹ்மத்திற்கே அஸாதாரண லக்ஷணமென்று ப்ரஹ்மஸூத்ரத்தில் ஸித்தாந்தஞ்செய்யப்பட்டுள்ளது. அதையநுஸரித்த ஆசார்ய திவ்ய ஸூக்திகள் கீழே பல காட்டப்பட்டன. இன்னமுஞ் சில ப்ரமாணங்களை உபபாதிப்போமிங்கு.

42. எம்பெருமானுக்குப் போலவே பிராட்டிக்கும் ஜகத்காரணத்வமுண்டென்கிற கொள்கை இதர ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் இல்லையென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. எங்ஙனேயென்னில்; ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் ஈச்வரபரிச்சேதத்தில்-*ஜ்ஞாநாநந்தாத்யத்யந்த ஸாம்யாத் ஜகஜ் ஜநகத்வசேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வாதி ஸாம்யாச் ச ஸாம்யகிராம் நிர்வாஹோ வ்யக்த:* என்றுள்ளவிடத்தில் வியாக்யானமான ரத்நபேடிகையில் திருப்புட்குழி பெரியார் பணித்துள்ளதாவது—*ஜ்ஞாநாநந்தாத்யத்யந்த ஸாம்யாதித்யத்ரேவ இஹ அத்யந்த சப்தாப்ரயோகோ ஜகத் காரணத்வாதிஷு கிஞ்சித்வைஷம்ய ஸத்பாவாபிப்ராய:. தேவீநிஷ்டம் ஜகத்காரணத்வம் ஹி ஸ்வரூபயோக்யதாமாத்ரரூபம், ந து பலோபஹிதவ்யாபாராத்மகம்; தேவ்யா தண்டதரத்வ விரஹாத்* என்று. இவ்விடத்தில் நாம்

ஞாபகப்படுத்தவேண்டியதொன்றுண்டு; அதாவது ஸ்தோத்ரபாஷ்யத்தில் (ச்லோ 20) *முக்தாநாம் ஜகத்வ்யாபாரே சக்திரஸ்தி; தத்ப்ராப்திர் நாஸ்தீதி பக்ஷோபி ந விசாரார்ஹ:* என்கிற தேசிகதிவ்யஸூக்தியே. அது நிற்க.

43. இங்கு நாம் நன்கு விமர்சிப்போம். பிராட்டிக்கும் ஜகத்காரணத்வ முண்டென்பவர்களைக் கேட்போம்: பிராட்டியை நிமித்த காரணமென்கிறீர்களா? உபாதாநகாரண மென்கிறீர்களா? ஸஹகாரிகாரண மென்கிறீர்களா? மூவகைக் காரணமுமென்கிறீர்களா? என்று. *ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்.........தைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி தத்தேஜோஸ்ருஜத* இத்யாதி ச்ருதி வாக்யத்தில் ''ஸதேவ இதம் அக்ரே ஏகமேவ ஆஸீத்'' என்று உபாதாநத்வத்தைச் சொல்லி 'அத்விதீயம்' என்று வேறொரு அதிஷ்டாதா இல்லாமையைச் சொல்லியிருக்கையாலே ஸச்சப்த வாச்யமான ப்ரஹ்மத்திற்கே நிமித்தத்வமும் உபாதாநத்வமும் நிர்த்தாரணம் செய்யப்பட்டிருக்கின்றன. ஆகவே நிமித்தகாரணத்வத்திலும் உபாதாநகாரணத்வத்திலும் பிராட்டிக்கு அந்வயமில்லை யென்று தேறியதாயிற்று.

44. காரணபூதனான ஸர்வேச்வரனிடத்தில் நிரூபக பூதையான லக்ஷ்மியின் ஸந்நிதாநமும் அவர்ஜநீயமாயிருக்கையாலே அவளுக்கும் காரணத்வத்தில் அந்வயம் வந்துதீருமன்றோ! என்கிற வாதமும் ஏலாது. அவளுக்கு அவர்ஜநீயதயா ஸந்நிதாநமே யல்லது காரணதயா ஸந்நிதானமில்லை யென்று ஸ்வீகரித்தபடியாகும். அச்யுதசதகத்தில் *புரிஸபஹாணஸரீரோ* இத்யாதி ச்லோகத்தினால் ஈச்வரனுக்கே உபாதாநத்வ நிமித்தத்வங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

45. இனி, பிராட்டிக்கு ஸஹகாரிகாரணத்வ வாதமும் பொருந்தாது. பகவான் ஸங்கல்பமாத்ரத்தையே ஸஹகாரியாகக் கொண்டவனென்பது ப்ரமாண ஸித்தம். கீழே காட்டிய அச்யுத சதக ச்லோகத்தில் *நிஜ ஸங்கல்பஸநாத:* என்றதனாலும் இது ஸித்தம். ஸ்ரீ பட்டரும் *ஸஹகார்யபேக்ஷமபி ஹாதுமிஹ ததநபேக்ஷ கர்த்ருதா ரங்கதந! ஜயதி தேஜ இதி ப்ரணதார்த்திஜித் ப்ரதிபடாபிபாவுகம்* என்கிற ச்லோகத்தினால் இதை விளக்கியருளினார். அந்த பட்டர் தாமே லக்ஷ்மீ கல்யாணத்தில் *ஜகந்நிதாநமத்வந்த்வம் த்வந்த்வம்* என்று ஸாதித்திருப்பதும் ஸுஸமஞ்ஜஸம். ஜகந்நிதாநத்வத்தை ஸ்ரீ மஹா லக்ஷ்மிக்குத் தனிப்பட அருளிச் செய்யாமல் திவ்ய தம்பதிகளிடத்தில் அந்வயிப்பதாகவே யருளிச் செய்திருக்கையாலே.

46. அந்த பட்டர் தாமே, *ப்ரலயஸமயஸுப்தம் ஸ்வம் சரீரைகதேசம் வரத சிதசிதாக்க்யம் ஸ்வேச்சயா விஸ்த்ருணந:, கசிதமிவகலாபம் சித்ரமாதத்ய தூந்வந் அநுசிகினி சிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம்* என்றருளிச் செய்திருப்பதை நோக்கினால் கலக்கம் சமிக்கும். இந்த ச்லோகத்தில், ஆண் மயிலின் ஸ்தானத்தில் எம்பெருமானையும் பெண் மயிலின் ஸ்தானத்தில் பிராட்டியையும் வைத்து, பெண் மயிலின் முகப்பே ஆண் மயில் தனது சிறகை விரித்துக் கூத்தாடுமாபோலே பிராட்டியின் முன்னே எம்பெருமான் ஸ்ருஷ்டிக்ரீடை செய்வதாக அருளிச் செய்திருக்குமழகு அதிமாத்ரம் விஸ்மயநீயம். கலாபமுடைமை ஆண் மயிலுக்கேயல்லது

பெண் மயிலுக்கில்லையென்பது ப்ரத்யக்ஷ ஸித்தம். இந்த த்ருஷ்டாந்தத்தினுல், *சிதசிதாக்க்யஸ்வசரீரைக தேசவிஸ்தாரணரூபமான* ஸ்ருஷ்டி பகவானுக்கே யுள்ளதென்று நிரூபித்தபடியாயிற்று. இந்த ச்லோகமொன்றே ஜகத்காரணத்வ விஷய விவாதத்தில் பரமார்த்த முணர்த்தப் போதுமானதென்று நிற்கின்றோம்.

47. *போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா* என்றும்* ஸர்வம் ப்ரோ தம் த்ரிவிதம் ப்ரஹ்மமேதத்* என்றும் உபநிஷத்து ஓதியுள்ளபடியே போக்தா வென் றும் போக்யமென்றும் ப்ரேரிதாவென்றும் சொல்லப்படுகிற சிதசிதீச்வர தத்வத் ரயாத்மகமாகவுள்ளது இந்த ப்ரபஞ்சம். இந்த மூன்று கோடியிற் சேராமல் பஹிர்பூதமா யிருப்பதொரு வஸ்து கிடையாது. ப்ரக்ருதி மஹான் முதலியவை களுக்கு போக்ய கோடியில் அந்தர்ப்பாவமும், பத்த முக்த நித்யரூபேண மூவகைப் பட்ட சேதநர்களுக்கு போக்த்ருகோடியில் அந்தர்ப்பாவமும் ஸர்வஸம்ப்ரதிபந்நம். ''க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:'' என்று ஓதியிருக்கையாலே சேதநாசேதநநியா மகனு யிருக்குமவன் ஒருவனே. அவனே விஷ்ணு சப்தவாச்யனுன ஸர்வேச்வரன்; ''சாஸ்தா விஷ்ணுரசேஷஸ்ய ஜகதோ யோஹ்ருதி ஸ்த்தித:, தம்ருதே பரமாத்மா நம் தாத க: கேந சாஸ்யதே'' என்பது முதலான பிரமாணங்களும் இங்கு அநுஸந் தேயம். அப்பெருமான் தானே சராசரங்களெல்லாவற்றிலும் உள்ளே புகுந்து வியாபித்திருந்து நியமிக்கின்ரு னென்பதும் ச்ருதி ஸித்தம். ''அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா'' ''யச்ச கிஞ்சிஜ்ஜகத் யஸ்மிந் த்ருச்யதே ச்ரூயதேபி வா, அந்தர்பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்த்தித'' இத்யாதி.

48. இந்த வ்யாப்தியானது குணத்தாலே யன்று, ஸ்வரூபத்தாலேயென்று அறியக்கடவது. *நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம்* என்பது முதலான பிரமாணங்கள் ஸர்வகதனுன ஸர்வேச்வரனுக்குப் பரமமஹத்பரிமாண ரூபமான விபுத்வத்தைத் தெரிவிக்கின்றன.

49. இப்படிப்பட்ட விபுத்வமானது போக்த்ரு வர்க்கத்தில் ஸம்பவிக்கக் கூடியதன்று. ப்ரஹ்ம ஸூத்ரத்தில் *உத்க்ராந்திகத்யாகதீநாம்* என்று சித்வஸ் துக்களுக்கு அணுத்வஸ்தாபகமான ஸூத்ரம் ப்ரஸித்தம். பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த தத்வத்ரயத்தில் முதற் பிரகரணத்தில் (14) 'ஹ்ருதய ப்ரதேசத்தில் நின்றும் உத்க்ரமித்துப் போவது வருவதாமென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே ஆத்மா அணுவாகக் கடவது. (15) அணுவாய் ஹ்ருதயத்தளவிலே நிற்குமாகில் சரீரமெங்கு மொக்க ஸுகதுக்கங்களை புஜிக்கிறபடி யென்னென்னில்; (16) மணித்யு மணி தீபாதிகள் ஓரிடத்திலே யிருக்க ப்ரபை எங்குமொக்க வியாபிக்குமாபோலே ஜ்ஞானம் எங்குமொக்க வியாபிக்கையாலே அவற்றை புஜிக்கத் தட்டில்லை'' என்கிற சூர்ணைகளை வியாக்கியானத்துடன் ஸேவித்தால் மேலே யெடுத்துக்காட்டின ப்ரஹ்ம ஸூத்ரத்தின் பொருள் நெஞ்சில் நன்கு பதியும். ஜீவ கோடியில் சேர்ந்தவ ளான ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கும் அணு ஸ்வரூபத்வமே ஸூத்ரகார ஸம்மதமென்று தேறிற்றுயிற்று.

50. பிராட்டி ஜீவகோடியிற் சேர்ந்தவளல்லள் என்பது பிறருடைய கொள்கை. அவர்களைக் கேட்கிறோம்; இவள் போக்ய கோடியில் சேர்ந்தவளா? ஈச்வர கோடியில் சேர்ந்தவளா? கோடி த்வயத்திலும் அகப்படதவளா? என்று. சைதந்யமுடையவளான பிராட்டியை போக்ய கோடியில் சேர்ப்பதற்கில்லை. ஈச்வரத்வம் இரண்டு வ்யக்தியில் இருக்க வொண்ணுமையாலே ஈச்வர கோடியிலும் சேர்ப்பதற்கில்லை. *ஈசதே தேவ ஏக:* என்றே ச்ருதியும் ஓதிற்று.

51. எம்பெருமானை வேறு வ்யக்தியாகவும் பிராட்டியை வேறு வ்யக்தியாகவும் இசையக்கூடாதென்றும், இருவரையும் ஏக வ்யக்தியாகவே கொள்ளவேணுமென்றும் பிறர் சொல்லுவது பொருந்தாது. "விஷ்ணுபத்நீம்" என்றும் "ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ" என்றுமுள்ள ச்ருதிகளோடு விரோதிக்கு மாகையாலே. "அர்த்தோ வா ஏஷ ஆத்மநோயத்பத்நீ" என்கிற ச்ருதியைக்கொண்டு இப்படி சொல்லலாகாதோ வென்னில்; அந்த ச்ருதியின் தாற்பரியம் அதுவன்று; தம்பதிகள் இருவருங் கூடியே தர்மாநுஷ்டாநம் செய்ய வேணுமென்றும் அப்படி யிருவரும் ஒன்று கூடாதொழியில் பயனில்லை யென்றும் தெரிவிப்பதே அந்த ச்ருதியின் தாற்பரியமென்பது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். இங்ஙனன்றாகில் அந்த ச்ருதியைக்கொண்டு உலகிலுள்ள தம்பதிகளையெல்லாம் ஏக வ்யக்தியே யென்ன வேண்டிவரும். ஸுக துக்காதி வ்யவஸ்த்தையும் வ்யாஹதமாகும். அந்த வ்யவஸ்த்தையேயன்றோ ஆத்ம பேதத்தை அறுதியிட்டுத் தருகின்ற ப்ரமாணங்களில் தலைமை பெற்றிருப்பது.

52. எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் ஐக்ய வ்யபதேசம் சில விடங்களிற் காணப்பட்டாலும் அது அவிநாபாவதாத்பர்யகமே யென்றும் பெரியார் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். ஏவஞ்ச, பிராட்டிக்கு ஜீவகோடியில் அந்தர்ப்பாவமே ப்ரமாண சரணர்களுக்கு அங்கீகார்ய மென்றதாயிற்று.

53. தேசிகன் திருவுள்ளமும் இதுவே யென்பதை நன்கு காணலாம். ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் ஜீவபரிச்சேதத்தின் தொடக்கத்தில்—"அத ஜீவ:, அல்பபரிமாணத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம், சேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வமித்யாதி தல்லக்ஷணம்" என்று அருளிச் செய்யப்பட்டுள்ளது. ஜீவாத்மாவுக்குச் சொன்ன இந்த லக்ஷணமானது பிராட்டியிடத்திலும் ஸமந்வயமடைகின்ற தென்பதில் ஐயமில்லை. இவ்விடத்தில் வ்யாக்கியாந கர்த்தாவான ரங்கராமாநுஜ ஸ்வாமி இந்த ஜீவலக்ஷணத்திற்குப் பிராட்டியை லக்ஷ்யமாகாதபடி செய்துவிடலாமென்று சிறிது பாடுபட்டு, அதில் தாமே அத்ருப்தராய் "லக்ஷ்ம்யா: ஜீவாந்தர்ப்பாவபக்ஷே து ந தோஷ:" [பிராட்டியை ஜீவகோடியில் சேர்ந்தவளாகக் கொள்ளுமளவில் விரோதமே யில்லை] என்று நிகமநம் செய்தார். பிராட்டிக்கு ஜீவகோட்யந்தர்ப்பாவபக்ஷம் ஹேயமாகில் அந்த மஹாசார்யர் "லக்ஷ்ம்யா: ஜீவாந்தர்ப்பாவபக்ஷே து ந தோஷ:" என்றெழுத நெஞ்சிலும் நினையாரன்றோ. "ப்ரஹ்மணோ நிர்குணத்வபக்ஷேது ந தோஷ:" "ப்ரதாநஸ்ய காரணத்வ பக்ஷே து ந தோஷ:" என்றாற் போன்ற வசந வ்யக்திகள் எங்கேனும் கண்டதுண்டோ? "ஸகல பூர்வாசார்ய ஸித்தாந்தம் பிராட்டிக்கு ஜீவகோட்யந்தர்ப்பாவபக்ஷமேயாம்" என்கிற கௌரவ ப்ரதிபத்தியினாலன்றோ அந்த முநிவரர் அங்ஙனேயெழுதிற்று. தேசிக திவ்ய ஸூக்திக்கு வியாக்கியான

மெழுதுமளவில் அவர் அங்ஙனே யெழுதுகையாலே 'தேசிகனுக்கும் அபிமதமான பக்ஷமிது' என்று காட்டினவருமாகிறார்.

54. ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் முதல் அம்சத்தில் எட்டாவது அத்யாயத்தில் *யதா ஸர்வகதோ விஷ்ணு: ததைவேயம் த்விஜோத்தம* என்றிருப்பதைக் கொண்டு பிறர் ப்ரத்யவஸ்தாநம் பண்ணுவதொன்றுண்டு. எம்பெருமான் எப்படி ஸர்வ கதனோ அப்படியே பிராட்டியும் என்று இந்த ப்ரமாணத்தில் சொல்லி யிருப்பதாக விளங்குகையாலே எம்பெருமானுக்குப்போலே பிராட்டிக்கும் விபுத்வம் கொள்வது ப்ராமாணிகந்தானே யென்னில்; கேண்மின். அந்த ச்லோகம் எந்த ப்ரகரணத்தி லுள்ளது? எதற்காக அவதரித்தது? என்பதை முன்பின் பார்த்துத் தெரிந்து கொண்டால் கலங்க விரகில்லை. அதை நன்கு விளக்குகிறோமிங்கு.

55. மைத்ரேயருக்கு உபதேசம் செய்து வருகின்ற பராசரர் *தேவெள தாத்ரு விதாதாரெள ப்ருகோ: க்க்யாதிரஸூயத, ச்ரியஞ்ச தேவதேவஸ்ய பத்நீ நாரா யணஸ்ய யா* என்று, ப்ருகுபத்நியான கியாதியென்பவள் தாதா விதாதா என்னு மிரண்டு தேவதைகளையும் நாராயண பத்நியான லக்ஷ்மியையும் பெற்றதாகக் கூறினர். அது கேட்ட மைத்ரேயர் *க்ஷீரோதாத் ஸ்ரீஸ்ஸமுத்பந்நா ச்ரூயதேம்ருத மந்தநே, ப்ருகோ:க்க்யாத்யாம்ஸமுத்பந்நேத்யேததாஹ கதம் பவான்?* என்று கேள்வி கேட்டார். நித்யையான லக்ஷ்மிக்கு உற்பத்தி சொல்லுவது எங்ஙனே கூடு மென்று கேள்வியின் ஸாராம்சம். இதற்கு விடை யிறுக்கிறார் பராசரர் *நித்யை வைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ, யதா ஸர்வகதோ விஷ்ணு: ததைவே யம் த்விஜோத்தம* என்று. விஷ்ணு நித்யனாயிருக்கச் செய்தேயும் அவனுக்கு ஐச்சி கமான உத்பத்தி கூடுகிறாப்போலே பிராட்டிக்கும் கூடுமென்று ஸமாதாநஸாரம்.

56. நித்யனாய் நிகிலஜகஜ்ஜநகனாய் நித்யஸித்த லக்ஷ்மீ ஸம்பந்த சாலியா யிருக்கின்ற எம்பெருமான் ஸர்வ ஜகத்ரக்ஷணார்த்தமாக ஸர்வ தேசங்களிலும் ஸர்வ ஜாதிகளிலும் அவ்வோ விக்ரஹ விசேஷ விசிஷ்டனாய்க் கொண்டு ஸந்நிஹித னாகிறாப் போலே, பிராட்டியும் நித்யையாய் நிகிலஜகஜ்ஜநநியாய் நித்யஸித்த பகவத்ஸம்பந்த சாலிநியாயிருக்கச் செய்தேயும் நித்யாநபாயிநீம் என்று சொன்ன நிரபாயத்வத்தை ரக்ஷித்துக் கொள்வதற்காக அப்பெருமானுக்கேற்ற விக்ரஹ விசேஷங்களோடே ஸர்வத்ர ஸந்நிஹிதையாகின்றாளென்றதாயிற்று. நிரபாயத்வ மென்பது விச்லேஷாஸஹத்வமாத்ரமே யன்று; நியததந்ஸாஹசர்யமும் அதுவாகை யாலே பிராட்டியின் இந்த ஸந்நிதியானது நிரபாயத்வ ரக்ஷணார்த்தமே யாகின்றது.

57. இதற்குமேல் *அர்த்தோ விஷ்ணுரியம் வாணீ* என்று தொடங்கி "ரதீ ராகச்ச தர்மச்ச லக்ஷ்மீர்கோவிந்த ஏவ ச" என்னுமளவான பதினாறு ச்லோகங் களாலே திவ்ய தம்பதிகளின் விக்ரஹ வ்யாப்தி ப்ரகாரத்தை நன்கு உபபாதித் திருக்கையாலே விக்ரஹவ்யாப்தியே ஸர்வகதசப்தார்த்தமாயிருக்கத் தகுதி யுடைத்து. ஸ்வரூப வ்யாப்தி விவக்ஷிதமாகில் "தேவதிர்யங்மநுஷ்யேஷு புந்நாமா பகவாந் ஹரி:, ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர்மைத்ரேய நாநயோர் வித்யதே பரம்" என்றது பொருந்தாதே.

58. அடுத்த ஒன்பதாமத்யாயத்திலும் *ஏவம் யதா ஜகத்ஸ்வாமீ தேவ தேவோ ஜநார்தந:, அவதாரம் கரோத்யேஷா ததா ஸ்ரீஸ்தத்ஸஹாயிநீ, புநச்ச பத்மா ஸம்பூதா ஹ்யாதித்யோபூத் யதா ஹரி:, யதா ச பார்க்கவோ ராமஸ்ததா பூத்தரணீ த்வியம், ராகவத்வேபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாநபாயிநீ, தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர்தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ்தநூம்* என்கிற ச்லோகங்களாலும் ப்ரச்நோத்தர வாக்யத்தின் முதலிலுள்ள ஸர்வகதத்வோக்தி யானது நன்கு வியாக்கியானம் செய்யப்பட்டதாயிற்று. *த்வயா ச விஷ்ணுநா சாம்ப ஜகத் வ்யாப்தம் சராசரம்* என்ற வசனமும் இப்புடையிலேதானே நன்கு பொருந்துகின்றதாயிற்று. அந்த ப்ரகரணத்திலேயே யன்றோ *ஸௌம்யாஸௌம் யைர் ஜகத் ரூபைஸ்தவைதத் தேவி பூரிதம்* என்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லியுள் ளது. "அநுஜநுரநுரூபரூபசேஷ்டா," "யதி மநுஜதிரச்சாம்" என்கிற பட்டர் ஸ்ரீ ஸூக்திகளும் இங்கே பொருந்த அனுஸந்தேயம். ஆகவே ஜீவகோடியில் சேர்ந்தவளான பிராட்டி அணுஸ்வரூபையேயல்லது விபுஸ்வரூபையல்லளென்றும், வ்யாப்தி சொன்னவிடம் விக்ரஹ வ்யாப்திபரமே யன்றி ஸ்வரூபவ்யாப்திபரமன் றென்றும் நிகமித்ததாயிற்று. ... ... ... ... *

# 15. ஜாதியின் விநாசத்தைப்பற்றி

59. "ந சூத்ரா பகவத்பக்தா: விப்ரா: பாகவதா: ஸ்ம்ருதா:, ஸர்வவர்ணேஷு தே சூத்ரா: யே ஹ்யபக்தா ஜநார்தநே," "ச்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்திவிஹீநஸ்து யதிச்ச ச்வபசாதம:" என்பது முதலான பல ப்ரமாணங்கள் வர்ணாச்ரமங்களில் சரக்கறுத்து பகவத் ஸம்பந்தத்தையே உத்கர்ஷ ஹேதுவாகச் சொல்லியுள்ளன. "பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதாஹ்யஹம்:" என்கிற பகவத் வசனத்தைத் தொண்டரடிப் பொடியாழ்வார் "இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின் கொண்மினென்று நின்னோடு மொக்க வழிபட வருளினாய்" என்கிற பாசுரத்தாலே நிரூபித்தருளினார். இங்ஙனே யுள்ள பல்லாயிரம் பிரமாணங்களினால் உத்க்ருஷ்ட நிக்ருஷ்ட ஜன்மம் இன்ன தென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்குமதை ஸ்ரீவசனபூஷணம் ஆசார்ய ஹ்ருதயம் முதலான திவ்ய க்ரந்தங்களில் நம் ஆசாரியர்கள் பரக்க அருளிச் செய்துள்ளார்கள். ஆழ்வார்களில் சிலர் தாழ்ந்த வருணங்களில் அவதரித்திருப்பதனால் அவர்கள் பக்க லில் ஜாதிப்ரயுக்தமான நிகர்ஷம் பாராட்டலாகாது. என்பதற்காகவே இவ் விஷயம் ரஹஸ்ய நூல்களில் நிரூபிக்கப்பட்டுள்ளது. போலியான பக்தியை அபி நயித்து பாகவதனென்றும் பக்தனென்றும் பேர் சுமக்கின்ற இக்காலத்தவர்களைப் பற்றி இந்த உத்க்ருஷ்டஜன்ம ப்ரபாவ விஷயம் ஸர்வாத்மநா அப்ரஸக்தம். "கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ்ஸர்வயோனிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதா நாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்" என்கிற பிரமாணத்திற்கு இலக்கான மஹநீயர் களைப் பற்றியே உத்க்ருஷ்ட ஜந்மநிரூபணம் ரஹஸ்ய க்ரந்தங்களில் அமைந்தது.

ஆனுல் ஜீவநார்த்தமாய் வேஷதாரிகளான இக்காலத்தவர்கள் அந்த நிரூபணங்களைத் தங்கள் விஷயமாக ப்ரமித்து அஹங்கரித்து அழிகைக்கு உடலாகையாலே, பூருவர்களின் க்ரந்தங்களில் இந்த நிரூபணங்கள் இல்லாதிருக்கலாமே யென்று சில மஹான்கள் நினைக்கவும் நேர்கின்றது.

60. அஸங்குசித ஹ்ருதயர்களான ஆசாரியர்களோ வென்னில் சாஸ்த்ரார்த்தங்களை உள்ளபடி நிரூபித்தருளக் கடமைப்பட்டவர்களாதலால் ஹிதசிந்தையோடே இந்த நிரூபணங்களைப் பண்ணிப் போந்தார்கள். அது இக்காலத்தவர்கள் நசித்துப் போகைக்கு உடலானுல் ''தத்ரைவ கேபி சபலா: சலபீபவந்தி'' என்ற கணக்கிலே நேர்கின்ற இந்த ஆபத்துக்கு அவ்வாசாரியர்கள் காரண பூதர்களாக விரகில்லை. அப்பெரியார்கள் நிரூபித்தருளியுள்ள விஷயத்தின் ஸாரம் இவ்வளவே காண்மின் :—

61. உலகத்தில் அவரவர்கள் நமக்குப் பெருமையுண்டென்று நினைப்பதற்குப் பல ஹேதுக்களுள்ளன. உயர்ந்த ஜாதியிலே பிறந்திருக்கின்ருே மென்று சிலர் பெருமை கருதுவர். உயர்ந்த ஆச்ரமத்தில் இருக்கின்ருேமென்று [ஸந்ந்யாஸாச்ரமம் பூண்டு யதியாயிருக்கின்ருேமென்று] சிலர் பெருமை பாராட்டுவர். தர்க்க வ்யாகரண மீமாம்ஸைகள் முதலான சாஸ்த்ரங்களில் விசேஷபாண்டித்யம் படைத்திருக்கிருேமென்று சிலர் பெருமை கொள்வர். வேதவிதிகளைத் தவருது ஸ்நாந ஸந்த்யாவந்தனம் முதலான நித்யநைமித்திக ஆசாரங்களில் வழுவாதிருக்கின்ருேமென்று சிலர் தம்மைப் பெரியோராக நினைத்திருப்பர்கள். இப்படி அவரவர்கள் தாங்கள் நினைத்திருப்பதே யன்றி இக்காரணங்கள் பற்றி அவர்களைப் பெருமை வாய்ந்தவராக இதரர்கள் பலரும் நினைத்திருப்பது முண்டு; சொல்லுவதுமுண்டு.

62. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலே ஆத்மாவுக்கு நிரூபகமென்று நிஷ்கர்ஷித்து அறிதற்குத் தகுதியாக த்யாஜ்யோபாதேயங்களைப் பகுத்துணரத்தக்க ஞானமில்லாதவர்களே இங்ஙனம் நினைத்திருப்பர்களென்றும், அப்படிப்பட்ட ஞானமுள்ளவர்கள் கீழ்ச்சொன்ன காரணங்களினுல் மாத்திரம் ஒரு பெருமை கருதார்கள், பகவத் ஸம்பந்தமொன்றைக்கொண்டே பெருமையை நிஷ்கர்ஷிப்பார்களென்றும் நம் ஆசாரியர்கள் அறுதியிட்டுள்ளார்கள்.

63. இவ்விஷயங்களுக்கு அடைவே பிரமாணங்கள் காட்டப்படுகின்றன; *சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் ந விந்ததி, வேதபாரபராக்ராந்த: ஸ வை ப்ராஹ்மணகர்தப:* நான்கு வேதங்களையும் அதிகரித்து வைத்தே வேதமுழுப் பொருளாகிய எம்பெருமானை அறியப்பெருதவன் குங்குமஞ்சுமந்த கழுதைபோலே தான் சுமந்து கொண்டு திரிகிற வேதத்தின் பரிமளமறியாத பிராமணக் கழுதை யென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகவே வெறும் பிராமண ஜாதிப் பிறப்பைக் கொண்டே பெருமை பாராட்டலாகாதென்பது விளங்கிற்று. *ச்வபசோபி பஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்திவிஹீநஸ்து யதிச்ச ச்வபசாதம:* சண்டாள யோனியிற் பிறந்தானுயினும் விஷ்ணுபக்தியுடையவனுயிருந்தால் அவன் கேவல ப்ராஹ்மணனிற் காட்டிலும் சிறந்தவன்; உத்தமாச்ரமியானுலும் எம்பெரு

மானிடத்தில் பக்தி யில்லாதவன் சண்டாளனிற் காட்டிலும் தண்ணியன் என்று இதனுல் சொல்லிற்று. ஆகவே வெறும் ஸந்ந்யாஸாச்ரமத்தைக் கொண்டே பெருமை கருதலாகாதென்று விளங்கிற்று. *தத் கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே, ஆயாஸாயாபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம்* மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும்; அப்படியல்லாதது செருப்புக்குத்தக் கற்ற கல்வி போன்றதேயாகும் என்று இதனுல் சொல்லிற்று. ஆகவே தர்க்க பாண்டியத்தைக் கொண்டே பெருமை பாவிக்கலாகாதென்பது விளங்கிற்று.

64. எம்பெருமானுடைய சிந்தனை யில்லாதவர்கள் செய்கின்ற கர்மாநுஷ்டானம் சாம்பலிலிட்ட ஆஹுதிபோல் ப்ரயோஜனமற்றதென்று ''ஆம்நாயாப்யஸ்நாந்யரண்யருதிதம்'' இத்யாதி முகுந்தமாலை ச்லோகத்தினுல் விரிவாகத் தெரிவிக்கப்படுகின்றது. ஆகவே வெறும் வைதிக கருமானுஷ்டானங்களைக் கொண்டே பெருமை கருதலாகாதென்பது விளங்கிற்று.

65. ஜாதியினுல் ஏற்றமும், ஆச்ரமத்தினுல் உயர்வும், கல்வியினுல் சிறப்பும், ஒழுக்கத்தினுல் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ்செல்வமில்லாதபோது சிறிதும் பயன்படாதென்பது தெளிவாயிற்று. இவ்வர்த்த விசேஷங்களை ஸ்ரீ வசன பூஷணமும் ஆசார்ய ஹ்ருதயமும் பரக்கப் பேசியுள்ளது. இவ்வர்த்த விஷயமான விவாதம் ஸம்பிரதாயத்தில் ஒரு பெரிய விஷயமாக வுள்ளது. சாஸ்த்ரார்த்த தத்வமிருக்கும்படியை நாம் கீழே ப்ரமாண பூர்வகமாகக் காட்டியாயிற்று. இந்த ப்ரமாணங்களில் எவர்க்கும் விப்ரதிபத்தி இராது. ஆனுலும் வர்ணுச்ரம வ்யவஸ்தையை மீறி இதர வர்ணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ ஏலாது என்னுமபிஸந்தியினுல் இவ்வர்த்தத்தில் வாத விவாதங்களைப் பிறர் செய்கிருர்கள். அவற்றை அநுவாதஞ்செய்து மறுப்பெழுத நாம் இங்கு விரும்புகின்றிலோம். ஏனென்னில், இது அனுஷ்டானத்திற்கு உபயோகப்படாத விஷயமாக இராநின்றது. இக்காலத்தில் இதர வருணத்தவர்கள் யோக்யதை மிகுந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் திறத்திலே நாம் எங்ஙனம் நடந்துகொள்ளுகிறோமென்பது அனைவர்க்கும் அபரோக்ஷம். இவ்வர்த்த விசேஷங்களைச் சேமிக்கின்ற நாமும் இவற்றை க்ஷேபிக்கின்ற பிறரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கே யிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தம். ஆனுல் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூருவர்கள் அவசியமாக எழுதி வைத்தது எதற்காக வென்றுல், அவர்களுடைய காலத்திலும் பண்டைக்காலத்திலும் இருந்த லோகாதீத பரம விலக்ஷண பரம பக்த சிகாமணிகளைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்ததாகும்.

66. இக்காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவதோத்தமர்கள் *க்வசித் க்வசித்* என்றபடியே ஓரோவிடங்களிலே தோன்றுகை அஸம்பாவித மன்று. அன்னவர் திறத்திலே நாம் ப்ரதிபத்தி குன்றுமேயிருக்கவேணு மென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். ஆகவே ஈண்டு இதில் விசேஷித்து விளக்கவேண்டிய அவசியமில்லையெனினும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷ ஸரணியில் ஒரு விஷயம் மாத்திரம் இங்கு நன்கு தெளிவிக்கவேண்டியதாகவுள்ளது. அதைப்பற்றியே முக்கியமாக இவ்வதிகாரம் எழுதலாகிறது.

67. அவ்விஷயம் யாதெனில்; இந்த ஜந்மோத்கர்ஷ விசாரத்தில், ஜாதி நசிக்குமென்று நம் ஆசார்யர்கள் அருளிச்செய்து போந்தார்கள். " க்ஷத்ரியனை விச்வாமித்ரன் ப்ராஹ்மரிஷியாக்கினன் " இத்யாதி ஸ்ரீ ஸூக்திகளும் ஸ்ரீ வசந பூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் விளங்குமவை. இவற்றுக்கு மறுப்பாக ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்தில் சில எழுதியுள்ளதனுல் அவை எவ்வளவு பொருந்து மென்பது இங்குச் சிறிது விமர்சிக்கப்படுகின்றது.

68. "சருவ்யத்யாஸாதிகளான சில விசேஷ நிதாநங்களாலே வருகிற விச்வா மித்ராதிகளுடைய நிலே வேறு சிலர்க்குக் கூடுமென்கை வசந விருத்தம்." என்பது ரஹஸ்யத்ரயஸாரத்திலுள்ளது. இங்குத் தெளிமின்.

69. ஸ்ரீ ராமாயணத்தில் பாலகாண்டத்தில் ஐம்பத்தாரும் ஸர்க்கத்திலே *க்ஷத்ரபந்தோ ஸ்திதோஸ்ம்யேஷ: யத் பலம் தத் விதர்சய; நாசயாம்யத்ய தே தர்ப்பம் சஸ்த்ரஸ்ய தவ காதிஜ!* என்றும், *க்வ ச தே க்ஷத்ரியபலம்* என்றும் *பச்ய ப்ரஹ்மபலம் திவ்யம் மம க்ஷத்ரியபாம்ஸந* என்றுமிப்படி பல விடங்களி லும் ஸ்ரீ வஸிஷ்ட பகவான் விச்வாமித்ரனே க்ஷத்ரியனுகவே சொல்லிப் போந்தான். விச்வாமித்ரன் தானும் *திக்பலம் க்ஷத்ரியபலம் ப்ரஹ்மதேஜோபலம் பலம்* என்று தன்னே க்ஷத்ரியனுகவே சொல்லிக்கொண்டான். அன்றியும் *தபோ மஹத் ஸமாஸ்த்தாஸ்யே யத்வை ப்ரஹ்மத்வ காரணம்* என்றும் ப்ராஹ்மண்ய ப்ராப் திக்கு உறுப்பாகத் தவம் புரியப் போகிறேனென்று சொல்லிக்கொண்டு தபஸ்ஸிலே ப்ரவர்த்திக்கையாலே அதுக்கு முன்னே சருவ்யத்யாஸாதி நிபந்தநமான ப்ராஹ் மண்யம் அவனுக்குண்டாயிருந்த தென்கை ஸ்ரீராமாயணத்தோடு சேருவது அரிது.

70. ஸஹஸ்ரநாம பாஷ்ய மருளிச் செய்யாநின்ற பட்டரும் உபோத்காதத் திலே *ஸ்வைசநேந க்ஷத்ரியம் விச்வாமித்ரம் ப்ராஹ்மணீக்ருதவதோ பகவதோ வஸிஷ்டஸ்ய* என்று க்ஷத்ரியனை விச்வாமித்ரனே ஸ்வவசனத்தாலே ப்ரஹ்ம ரிஷியாக்கினதை யன்றோ வஸிஷ்ட பகவானுக்கு ஏற்றமாக அருளிச் செய்தது. இங்ஙனன்றிக்கே விச்வாமித்ரனுக்கு ப்ராஹ்மண்யம் ஜந்மஸித்தமாயிருந்தால் பட்டர் இப்படி யருளிச் செய்யக் கூடாதே. தபோ மூலகமான வஸிஷ்ட வாக்யத் தாலே ப்ராஹ்மண்யம் இடையில் வந்தது என்று ஸ்ரீ ராமாயணத்தில் தேறி நின்ற பொருளேயன்றோ பட்டர் இங்ஙனே அநுவதித்தருளிச் செய்தது.

71. இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத் தக்கதொரு ப்ரமாணமுண்டு. *அந்ருஷ்யாநந்தர்யே பிதாதிப்யோஞ்* (4—1—104) என்கிற வியாகரண ஸூத்ரத் தின் பாஷ்யத்திலே *அந்ருஷ்யாநந்தர்ய இத்யுச்யதே. தத்ரேதம் ந ஸித்த்யதி— கௌசிகோ விச்வாமித்ர இதி. கிம் காரணம்? விச்வாமித்ரஸ்தபஸ்தேபே நாந்ருஷி: ஸ்யாமிதி தத்ரபவாந்ருஷிஸ்ஸம்பந்ந:. ஸ புநஸ்தபஸ்தேபே—நாந்ருஷே: புத்ர: ஸ்யாமிதி தத்ரபவாந் காதிரபி ருஷிஸ்ஸம்பந்ந:. ஸ புநஸ்தபஸ்தேபே நாந்ருஷே: பௌத்ரஸ்ஸ்யாமிதி தத்ரபவாந் குசிகோபி ருஷிஸ்ஸம்பந்ந:* என்று விச்வாமித்ரன் தன் தவ வலிமையினுல் தானும் தன் பிதாவும் தன் பிதாமஹனும் ரிஷித்வத்தை

யடைந்தானென்று ஸுஸ்பஷ்டமாகப் பதஞ்சலி முனிவர் பணித்தார். காதிக்கும் குசிகர்க்கும் சருவ்யத்யாஸமானதுண்டோ?

72. இனி ஸ்ரீ விஷ்ணு புராண வசனங்களையும் விமர்சிப்போம். அதில் (4—7—24) "அத வநாதாகத்ய ஸத்யவதீம் ருஷிரபச்யத்; அதிபாபே! கிமிதமகார்யம் பவத்யா க்ருதம்? அதிரௌத்ரம் தே வபுர்லக்ஷ்யதே. நூநம் த்வயா த்வந் மாத்ருஸாத்க்ருதச்சருருப (யு) புக்த:. ந யுக்தமேதத். மயா ஹி தத்ர சரௌ ஸகலைச்வர்ய வீர்ய சௌர்யபல ஸம்பதாரோபிதா. த்வதீயசராவபி அகிலசாந்தி ஜ்ஞானதிதிக்ஷாதி ப்ராஹ்மண குண ஸம்பத். தச்ச விபரீதம் குர்வத்யாஸ்தவ அதிரௌத்ராஸ்த்ரதாரண பாலநநிஷ்ட: க்ஷத்ரியாசார: புத்ரோ பவிஷ்யதி; தஸ்யாச்ச உபசமருசி: ப்ராஹ்மணாசார இதி" என்றுள்ளது. இதனால் சருக்களுக்கு சௌர்யாதிகுணாதிசயப்ரயோஜகத்வம் சொல்லிற்றித்தனை யல்லது ப்ராஹ்மண்யாதிஜாதிப்ரயோஜகத்வம் சொல்லிற்றில்லையே. "வீர்யசௌர்யபலஸம்பதாரோபிதா" என்றும் "ப்ராஹ்மணகுணஸம்பதாரோபிதா" என்றுமன்றோ சொல்லிற்று. "க்ஷத்ரியாசார: புத்ரோ பவிஷ்யதி, ப்ராஹ்மணாசார:" என்றதே யொழிய "க்ஷத்ரிய: புத்ரோ பவிஷ்யதி, ப்ராஹ்மண: புத்ர:" என்றதில்லையே. ஆகவே சருவ்யத்யாஸம் ப்ராஹ்மண்யாதிஜாதிப்ரயோஜகமன்று.

73. இன்னமும் விச்வாமித்ரனுக்கு சரு வ்யத்யாஸத்தாலே ப்ராஹ்மண்யம் முன்பே உண்டாயிருந்ததாகில் அவனுக்கு க்ஷத்ரிய கல்பத்தாலே முன்பு பண்ணின உபநயநாதிகள் சாஸ்த்ரீயமாகாமற் போகும். மேலும் இந்த சருவ்யத்யாஸத்தாலே பரசுராமனுக்கு க்ஷத்ரியத்வம் வரவேண்டுமாகையாலே அவனுக்கு ப்ராஹ்மண்யம் இல்லாமேபோம். ப்ராஹ்மண கல்பத்தாலே அவனுக்குப் பண்ணின உபநயநாதிகளும் அசாஸ்த்ரீயமாகும்.

74. இவற்றையெல்லாம் திருவுள்ளம்பற்றியே மணவாளமாமுனிகள் ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானத்திலே—"க்ஷத்ரிய குலோத்பவனான விச்வாமித்ரன் தஜ்ஜன்மத்திலே தான் பண்ணின தபோ விசேஷமடியாக வஸிஷ்ட வாக்யத்தாலே க்ஷத்ரியத்வம் பின்னாட்டாதபடி ப்ரஹ்ம ரிஷியாய் விட்டானிறே" என்றருளிச் செய்தார்.

75. தேவதாதிகரண ச்ருதப்ரகாசிகையிலே "பச்சாத் விச்வாமித்ர ப்ரப்ருதீநாம் ச ப்ராஹ்மண்யாத்யபாவப்ரஸங்காத்" என்றுள்ளது. இதனால் விச்வாமித்ராதிகளுடைய ப்ராஹ்மண்யாதிகள் பிறப்பே பிடித்தன்றிக்கே பின்பு வந்ததாக நிஸ்ஸந்தேஹமாய்க் காட்டப்பட்டது. இது இப்படியிருக்க.

76. வீதஹவ்ய வ்ருத்தாந்த மொன்றுண்டு. அதாவது, வீதஹவ்யனென்பானொரு க்ஷத்ரியன் பகைவர்க்கு அஞ்சியோடிச் சென்று பரத்வாஜர் முதலிய மஹர்ஷிகளின் திரளிலே புக்கவளவிலே, அந்தப் பகைவர்கள் இந்தத் திரளருகே வந்து இங்கு க்ஷத்ரியனுளனோ? என்று கேட்டவாறே, அந்த மஹர்ஷிகள் சரணாகதனை சத்துருக்கள் கையிலே காட்டிக்கொடுக்க வொண்ணாதென்று "இங்குள்ளாரெல்லாரும் ப்ரஹ்மர்ஷிகளே" என்று சொல்லிவிட, அதனாலே வீதஹவ்யனுக்கு

க்ஷத்ரியத்வம் கழிந்து ப்ராஹ்மண்யம் ப்ராப்தமாயிற்றென்று மஹாபாரதாதி ப்ரஸித்தம். இக்கதையை ரஹஸ்யத்ரயஸார வியாக்கியானத்தில் [ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்தில் ஸாரவிவரணியில்] எழுதியுமுள்ளார்கள். இப்படி அல்ப சக்திகர்களான ரிஷிகளின் ஒரு வாக்யத்தாலே, அதிகார ஸம்பத்துமில்லாதாளொருவனுக்கு ஒரு ஜாதி நசித்து மற்றொரு ஜாதி ப்ராப்தமாம்போது, ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன்தானே திருவுள்ளமுகந்து அதிகார ஸம்பத்து வாய்ந்த அடியார்கள் திறமாக *ந சூத்ரா பகவத்பக்தா: விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:* என்றாற்போலே ஸங்கல்பித்தருளினால் அங்ஙனேயாவதற்கு ஓர் இடையூறுண்டோ? *பகவத்பக்தி தீப்தாக்நி தக்த்ததுர்ஜாதிகில்பிஷ:* என்ற ப்ரமாண கதியும் காண்க. ஜாதி நசிக்கமாட்டாதென்ற தேசிகர்தாமே *நமஸ்தஸ்மை கஸ்மைசந பவது* என்கிற ச்லோகத்திலே * சாபாயுதவதூத்ருஷத்தாதுர்ஜாத ப்ரசமநபதாப்போஜ ரஜஸே * என்றும் *சிலாதே: ஸ்த்ரீத்வாதிர்விபரிணதிரஸ்த்வத்ப்புதமிதம் ததோப்யேதச்சித்ரம் யதுத தஹநஸ்யைவ ஹிமதா* என்றும் பணித்திருக்கக் காணாநின்றோம்.

78. இனி அடுத்த விஷயம். ''பெரியவுடையார்க்குப் பெருமாள் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் பண்ணியருளினார்'' என்று ஸ்ரீ வசநபூஷணப் பாசுரம். இங்கு விவக்ஷிதமென்னவென்றால், லோகமர்யாதாஸ்தாபநார்த்தமாக அவதரித்துப் பித்ரு வசந பரிபாலநாதிகளாலே ஸாமாந்ய தர்ம ஸ்தாபந சீலராயிருப்பாரான பெருமாள் பரமபக்தரான ஜடாயுவுக்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தைத் தாமே பண்ணியருளினாரென்று சொன்ன முகத்தால், ஜன்மாதிகளால் சிறந்தவர்கள் அவற்றால் குறைந்திருக்கும் விலக்ஷண பாகவத விஷயத்தில் புத்ரக்ருத்ய மநுஷ்டிக்கலாமென்பது காட்டப்பட்டது. இதை யடியொற்றியே மாறனேரி நம்பிக்குப் பெரிய நம்பி சரமக்ருத்யம் அநுஷ்டித்தவாறும் மேலே அருளிச் செய்யப்பட்டுள்ளது. ''தர்மபுத்ரர் அசரீரி வாக்யத்தையும் ஜ்ஞாநாதிக்யத்தையுங்கொண்டு ஸ்ரீ விதுரரை ப்ரஹ்ம மேதத்தாலே ஸம்ஸ்கரித்தார்'' என்றும் அருளிச் செய்யப்பட்டுளது.

78. இவ்விடங்களுக்கு மறுப்பெழுதாநின்ற தேசிகர் ''தூஷ்ணீம் அநுஷ்டிதமாநல், வ்யக்தி விசேஷநியத மாதலாமித்தனே'' என்று (ரஹஸ்யத்ரயஸார—ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில்) வரைந்தார். ஜடாயு ஸம்ஸ்காரத்தைப்பற்றி ஸ்ரீ ராமாயணத்திற் பேசும் பிரகரணத்தில் ''யத்து ப்ரேதஸ்ய மர்த்யஸ்ய கதயந்தி த்விஜாதய:, தத் ஸ்வர்ககமநம் தஸ்ய பித்ர்யம் ராமோ ஜஜாப ஹ'' (ஆர. 68—34.) என்று பெருமாள் மந்த்ரஜபம் பண்ணினபடியை வால்மீகி முனிவர்தாமே ஸுஸ்பஷ்டமாகச் சொல்லி வைக்கையாலே அங்கே தூஷ்ணீமநுஷ்டாநவாதம் செல்லாது.

79. இனி, தர்மபுத்ரர் விதுரரை ஸம்ஸ்கரித்த விடத்திலாவது தூஷ்ணீமநுஷ்டாநவாதம் செல்லுமா? என்று பார்ப்போம். விதுரரை ஸம்ஸ்கரிக்க வேண்டிவந்தவளவில், அவருடைய ஜாதியைப் பார்ப்பதும் ஞானமிகுதியைப் பார்ப்பதுமாய் என் செய்வதென்று தரும புத்ரர் வியாகுலப் படுகிறபடியை மஹாபாரதம் சொல்லுகிற விடத்தில் ''தர்மராஜஸ்து தத்ரைநம் ஸஞ்சிஸ்காரயிஷுஸ் ததா, தக்த்துகாமோபவத் வித்வாந்'' என்று சொல்லிற்று. இதில் ததா என்றது

சார்த்தக மாகையாலே "ஸஞ்சிஸ்காரயிஷுச்சாபவத்" என்றதாகிறது. ஞான மிகுதிக்கீடாக யதாவத்தான ஸம்ஸ்காரம் பண்ணலாமா? என்று கலங்கி நின்று னென்றபடி.

80. அதற்குமேல் என்னுயிற் றென்னில்; ["அதாகாசே வசோப்ரவீத், போ போ ராஜந்ந தக்த்தவ்யமேதத் விதுரஸஞ்ஜ்ஞகம், கலேபரமிஹைதத் தே நைஷ தர்மஸ்ஸநாதந:, லோககவைலக்ஷண்ணோ நாம பவிஷ்யத்யஸ்ய பார்த்திவ, யதிதர்மம வாப்தோஸௌ ந சோச பரதர்ஷப".] உடனே ஒரு ஆகாசவாணி உண்டாயிற்றும். அது சொன்னபடி யென்னெனில்; ["ஏதந்ந தக்த்தவ்யம்"] "தூஷ்ணீம் ந தக்த்தவ்யமிதி யாவத்". இந்தத் திருமேனியை தூஷ்ணீம் தஹநம் பண்ணத்தகாது. "[ஸநாதந ஏஷ தர்ம: தே லோககவைலக்ஷண்ணோ ந பவிஷ்யதி]" ப்ராசீநாசாரஸித்தமாய் தூஷ்ணீம் தஹநமன்றிக்கே ஸம்ஸ்கரிப்பதாகிற இந்த தர்மமானது உனக்கு சாஸ்த்ர விபரீதமாக மாட்டாதென்றபடி. இது தனக்குக் காரணம் சொல்லுகிறது மேல் "[யதிதர்மமவாப்தோஸௌ]" இவர் யதியைப்போலே ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரார்ஹரேயொழிய தூஷ்ணீம் தஹிக்கத்தக்கவரல்லர் என்றபடி. "[ந சோச]" தூஷ்ணீம் தஹித்து விடுவதோ? ஸம்ஸ்கரிக்கக்கடவதோ? வென்று கலங்கி சோகியாதே கொள் என்றபடி. *

81. இங்கு [அஸௌ யதிதர்மம் அவாப்த:] என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கையாலே "புத்ரோ க்ருஹஸ்த்த: சுத்தோத யதேஸ்ஸம்ஸ்காரமாசரேத்" என்று தொடங்கி விதித்த ப்ரஹ்மமேதேந தாஹஸம்ஸ்காரம் இவர்க்குச் செய்ய விதிக்கப்பட்ட தென்றதாயிற்று.

82. "யதிதர்மம் அவாப்தோஸௌ" என்று, வேறு வ்யக்திகளிடத்திலும் ஸம்பவிக்கக் கூடியதான தர்ம விசேஷத்தை ப்ரஹ்மமேதஸம்ஸ்கார்யத்வ ப்ரயோஜகமாகச் சொல்லுகையாலே இத்தை 'வ்யக்தி விசேஷ நியதம்' என்னப் போகாது. யதிகளுக்கு தூஷ்ணீம் [அமந்த்ரகமாக] ஸம்ஸ்காரம் கண்டதில்லை. மந்த்ராபவாத ப்ரமாணமுமில்லை. ஆகையாலே தூஷ்ணீம் அநுஷ்டிதமென்னப் பொருந்தாது.

83. இனி, "ஸ்ரீ விதுரர்க்கு துர்யோதநன் சொன்ன ஜாதிவிசேஷத்தை பகவான் இசைந்தானுயிற்று" என்று இதையொரு விஷயமாக எழுதியுள்ளார் தேசிகர். அதாவது, கண்ணபிரான் விதுரர் திருமாளிகையிலே அமுதுசெய்து வந்தவாறே "கிமர்த்தம் புண்டரீகாக்ஷ புக்தம் வ்ருஷல போஜநம்" கண்ணா! சூத்ரனுடைய

---

* இப்போது அச்சிடப்பட்டுள்ள மஹாபாரதப் பதிப்புகளிற் காணும் பாடம் வேறு. பூருவாசாரியர்கள் உதாஹரித்துள்ள பாடம் வேறு. பூருவர்கள் கொண்ட பாடப்படியே நாம் விவரிக்கின்றோம். அச்சுப் புத்தக பாடத்தை நம்புவதானால் தர்மபுத்ரர் விதுரர்க்கு ஸம்ஸ்கார மொன்றுமே பண்ணவில்லை யென்னவேணும். இது தேசிகருடைய திருவாக்கோடும் விரோதிக்கும். "ப்ரஹ்மவித்தான விதுரர் யோக ப்ரபாவத்தாலே தேஹந்யாஸம் பண்ணினபின்பு ப்ராப்தனான தர்மபுத்ரன் செய்த ஸம்ஸ்கார விசேஷம்" என்பது ரஹஸ்யத்ரயஸார பங்க்தி யாகையாலே ஸம்ஸ்காரம் நடந்தமை இசையத்தக்கது. ஆகவே மஹாபாரத அச்சுப்பதிப்பில் ஏதோ மாறுட்டமுள்ளதென்பது திண்ணம்.

சோற்றை ஏதுக்காக உண்டாய்? என்று துர்யோதநன் கேட்க, அதற்குக் கண்ண பிரான் 'விதுரர் சூத்ரரல்லர்' என்று பதில்சொல்ல வேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாமல் "த்விஷதந்நம் ந போக்தவ்யம்...பாண்டவாந் த்விஷஸே ராஜந்" இத்யாதியாலே வேறு பதில் சொல்லியிருக்கக் காண்கையாலே [துரியோதநனுடைய பேச்சை மறுத்துரையாமையாலே] கண்ணன் விதுரரை சூத்ரனாகவே இசைந்தானாயிற்றென்பது தேசிகருடைய கருத்தாகின்றது. இதுவும் ஸமஞ்ஜஸமாகத் தோன்றவில்லை. துரியோதநனுடைய கேள்விக்குக் கண்ணபிரான் திருவுள்ளத்தாலே முக்கியமாகச் சொல்லவேண்டியதாகத் தோன்றின பதில் எதுவோ அது அங்கு வெளிவந்திருக்கின்றது. "துரியோதநா! நீ என்னுயிர் நிலையிலே த்வேஷிக்கையாலே *யோ விஷ்ணும் ஸததம் த்வேஷ்டி தம் வித்யாதந்த்யரேதஸம்* என்கிறபடியே நீ அந்த்யரேதஸ்ஸாகையாலே உன்னைப் பரித்யஜித்தோம்" என்று இங்ஙனே கண்ணன் கூறியுள்ள பதில்தான் அவசியமானது. அவன்னெஞ்சிலே பொறுக்கூடிய பதில் இதுவேயாகையாலே இதைவிட்டு வேறு பதில் சொல்லும்படியான அசாதுர்யம் கண்ணனுக்கு எங்கிருந்து வரும்? *ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதாஸ்ம்ருதா:* இத்யாதிகளாலே ஏற்கெனவே ஸித்தமான விஷயத்தை அங்குக் கண்ணன் எடுத்துரைக்கவேண்டிய அவசியமில்லாமையாலன்றோ அதைச்சொல்லாது விட்டது. அதனால், விதுரர் சூத்ரரேயென்று கண்ணபிரான் இசைந்ததாக எப்படியாய்விடும்? ஆகாது. இந்த ப்ரகரணத்தில் இங்ஙனே மற்றுஞ் சில விஷயங்களும் அபிநிவேச விஜ்ரும்பிதமாக எழுதப்பட்டிரா நின்றமை காண்க. "திரு ஸூரபியானாலும் கோத்வம் கழியாதிறே" என்ற வாதமும் அஸ்தாநே. 'பகவத்பக்தா ந சூத்ரா:' என்று ஸ்பஷ்டமாக எடுத்துக் கழித்தாப்போலே 'தேவஸூரபி: ந கௌ:' என்று எங்கும் சொல்லாமையாலே. இங்கு இவ்வளவு போதும். ... ... *

# 16. கைவல்ய மோக்ஷவிமர்சம்

84. கைவல்யமாவது ஸ்வாத்மாநுபவம். இதற்கொரு ஸ்தான விசேஷமுண்டு. அதுவும் மீட்சியில்லாத மோக்ஷமே யென்பது நம் ஆசாரியர்களின் ஸித்தாந்தம். இதை மோக்ஷமென்பது ஔபசாரிகமென்றும், மீட்சியுண்டென்றும் கூறுவர் பிறர். இவ் விவாதம் பூருவர்களின் காலத்தில் விசேஷமாக வளரவில்லை. பிற்காலத்தவர்கள் இதைப்பற்றி வெகு விரிவான க்ரந்த கோலாஹலங்களை வளரவிட்டார்கள். ஸ்தோத்ரரத்நத்தில் நான்காம் ச்லோகத்தில் *போகாபவர்க ததுபாயகதீ:* என்றவிடத்துக்கு வியாக்கியானஞ் செய்யுமிடத்து, பெரியவாச்சான் பிள்ளைக்கும் தேசிகருக்கும் அபிப்பிராயபேதம் விளைந்திருப்பதுண்டு. கைவல்யாநுபவமென்னும் ஆத்மாநுபவத்தை அபவர்க்க பதத்திற்கு அர்த்தமாக வுரைத்தருளினர் பெரிய வாச்சான்பிள்ளை; அதற்கு முந்தின போக பதத்திற்கே அது அர்த்தமென்றார் தேசிகர்.

85. நியாய ஸித்தாஞ்ஜநத்திலே தேசிகர் இது விஷயமாகச் சில சொல்லிக் கொண்டு போம்போது ஸ்ரீ பாஷ்யஸூக்திகள் ஸ்வமதாநுகூலங்களென்றும் கீதா பாஷ்ய ஸூக்திகள் மாத்திரம் தம் கருத்துக்கு இணங்கவில்லை யென்றும் திருவுள்

ளம்பற்றி *ஏகக்ரந்த சகலாஸ்வாரஸ்யம் பஹுக்ரந்தஸ்வாரஸ்யாய க்ராஹ்யம்* என்ற ஒரு வாக்கியத்தினல் கீதாபாஷ்யஸூக்திகளுக்கு அஸ்வாரஸ்யம் கல்பித்தரு ளினர். ஸ்ரீபாஷ்யஸூக்திகளையும் கீதாபாஷ்ய ஸூக்திகளையும் ஸமரஸமாக நிர் வஹிக்க இயலாமையாலே அந்யதரக்ரந்தத்திற்கு அஸ்வாரஸ்யகல்பநம் அவர்ஜ நீயம் என்று தேசிகருடைய திருவுள்ளமாயிருந்தது. ஒன்றுக்கும் அஸ்வாரஸ்யம் கல்பிக்க வேண்டாமல் எல்லாம் நன்கு பொருந்துகிறபடியைப் பெரியார் நிரூபிக் கிறார்கள் கேண்மின்.

86. கீதாபாஷ்யத்தில் பஞ்சாக்நி வித்யாநிஷ்டனை கேவலனுக்கு ப்ரஹ் மாத்மக ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபோபாஸநத்தையும், ப்ரக்ருதிவியுக்தாத்ம ஸ்வ ரூபா வாப்திரூபபலத்தையும் அர்ச்சிராதி கதியினல் பரமபத ப்ராப்தியையும் புந ராவ்ருத்தியில்லாமையையும் அருளிச் செய்துள்ளார்.

87. ஸ்ரீ பாஷ்யத்தில் ''அப்ரதீகாலம்பநாந்நயதீதி பாதராயண:'' என்ற ஸூத்ர விவரணத்தில்—''பஞ்சாக்நிவிதோபி அர்ச்சிராதிநா கதஸ்ய பரஹ்மப்ராப் த்யபுநராவ்ருத்திச்ரவணச்ச. அத ஏவ தத்க்ரதுந்யாயாத் ப்ரக்ருதி விநிர்முக்த ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுஸந்தாநம் ஸித்தம்'' என்றருளிச் செய்திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்ம ப்ராப்தியாகிற பலன் ஸ்ரீ பாஷ்யத்தில் சொல்லிற்றாகத் தேறு கின்றது. ஆகவே, ஆத்மஸ்வரூபாவாப்தியைப் பலனகச் சொல்லுகிற கீதாபாஷ் யத்திற்கும், ப்ரஹ்ம ப்ராப்தியைப் பலனகச் சொல்லுகிற ஸ்ரீ பாஷ்யத்திற்கும் பரஸ்பரவிரோதம் இருப்பதாகத் தோற்றும்.

88. இந்த விரோதத்தை விலக்க முயன்ற தேசிகர் மதுவித்யாந்யாயத்தை மனத்திலே கொண்டு ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தரபலனகவும் ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதான பலனகவும் கல்பித்து நிர்வஹித்தருளினர். இப்படி நிர்வஹிக்குமளவில் கீதாபாஷ்ய ஸூக்தியில் அஸ்வாரஸ்யம் ஏறுகின்றது. அவ் வளவேயல்ல; அவாந்தர பலனைக் கல்பிக்கவல்ல ப்ரமாணமும் துர்லபமாகின்றது. மதுவித்யாந்யாயம் இங்கே ஸுதராம் அப்ரஸக்தம்.

89. ஸ்ரீ ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ''முக்தாநாம் பரமா கதி:'' என்ற விடத்தில், ''பரமேதி விசேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித் அர்வாசீநா கதிர்கம்யதே'' என்று பட்டர் அருளிச் செய்ததும், வேதார்த்தஸங்க்ரஹதாத்பர்யதீபிகையில் ''பரமஸ்ஸ்வராடிதி முக்தாத்மோச்யதே; அத்ர பரமசப்தேந கைவல்ய மோக்ஷ வ்யாவ்ருத்தி:'' என்று ச்ருத ப்ரகாசிகாபட்டர் அருளிச் செய்ததும் பழுதாயொழி யும். ஒரு விரோதமும் வாராதபடி நிர்வஹிக்கும் வழி ஏதென்னில்;

90. ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதானபலன்; கீதா பாஷ்யத்திலருளிச் செய்தவிதுவே ஸித்தாந்தம். ஆனல் ஸ்ரீ பாஷ்யத்தில் ''ப்ரஹ்ம ப்ராப்த்யபுநராவ்ருத்திச்ரவணச்ச'' என்று ப்ரஹ்ம ப்ராப்தியை ப்ரதிபாதித்திருப் பது விரோதிக்கின்றதே யென்கிற சங்கை நிற்கின்றது. கேண்மின், விரோதமில்லை. அங்கு அடுத்தபடியாகவே ''அத ஏவ தத்க்ரதுந்யாயாத் ப்ரக்ருதி விநிர்முக்த ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுஸந்தாநம் ஸித்தம்'' என்றருளிச் செய்திருக்கையாலே தத்க்ரதுந்யாயத்தைக் காட்டினதற்கேற்ப ப்ரஹ்மாத்மகஸ்வாத்மப்ராப்திதான்

ப்ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸநத்திற்கு ஏற்றதான பலனுகத்தேறும், ஆகவே விசேஷணதயா ப்ரஹ்மத்திற்கு ப்ராப்யத்வம் தேறுகையாலே ப்ரஹ்மப்ராப்தி சொன்னது பொருந்தும். ப்ரதானமா யிருக்கவேண்டிய ப்ரஹ்மாநுபவம் அப்ரதானமாகி, ஆத்மாநுபவமே ப்ரதானமாய் நிற்கையாலே கைவல்ய மோக்ஷத்தை இழித்துக் கூறலாயிற்று.

91. இப்படி நிர்வஹிக்கில் ஸர்வம் ஸமஞ்ஜஸமாகிறது. இப்படியல்லாமல் ப்ரக்ருதி வியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தர பலனுகவும் ப்ரஹ்மாநுபவத்தை முக்கிய பலனுகவும் கல்பிப்பது நிர்மூலமென்னுமளவேயல்ல, ஸ்ரீஸூக்திக்கு அஸ்வாரஸ்ய கல்பகமாகவும் முடிகின்றது. பஞ்சாக்நிவித்யாநிஷ்டனுக்கு மூர்த்தந்ய நாடியினுல் நிஷ்க்ரமணமும் அவாந்தர பலனுகிற வொரு வ்யவதான மின்றிக்கே பலனைப் பெறுவதென்கிற விஷயமும் ச்ருதப்ரகாசிகையில் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

92. ஜாபகோபாக்க்யானத்தில் வ்யவஹிதமாய் பலன் ப்ராப்தமானதை இங்கு நிதர்சனமாகக் கொள்ளவேண்டியதில்லை. ஜிஹ்வை வழியாக நிஷ்க்ரமணமானது பற்றியே ஜாபகனுக்கு ப்ரஹ்மகாய நிஷேவண ரூபமான வ்யவதானம் ஏற்பட்டதென்று உணரக்கடவது. மூர்த்தந்ய நாடியினுல் நிஷ்க்ரமண மடைகின்ற பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு பலனில் வ்யவதான முள்ளதாகக் கல்பிப்பது ப்ராமாணிகமான வழியல்ல. ஆகவே கீதாபாஷ்யத்தில் அருளிச்செய்தபடி ப்ரக்ருதிவியுக்த ஆத்மஸ்வரூபாவாப்தி ரூபமான பலனே கேவலனுக்கு நியதமாகவுள்ளது. அது தானும் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸநஸித்தமான பலனுகையாலே விசேஷணதயா ப்ரஹ்மப்ராப்தியுமுள்ளதாகையாலே ப்ரஹ்ம ப்ராப்தியாகிற பலனை யருளிச்செய்த ஸ்ரீ பாஷ்யமும் அவிருத்தமாகிறதென்று கொள்க.

93. மஹாபாரத மோக்ஷ தர்மத்தில் முந்நூற்றைம்பதா மத்யாயத்தில் *சதுர்விதா மம ஜநா பக்தா ஏவ ஹி மே ச்ருதம். தேஷாமேகாந்திந: ச்ரேஷ்டா யே சைவாநந்ய தேவதா: அஹமேவ கதிஸ் தேஷாம் நிராசீ:கர்மகாரிணும், யே ச சிஷ்டாஸ்த்ரயோ பக்தா: பலகாமா ஹி தே மதா:, ஸர்வே ச்யவந தர்மாண: ப்ரதிபுத்தஸ்து மோக்ஷபாக்;* என்கிற ச்லோகங்கள் ஆசிரியர்களால் எடுத்தாளப்படுகின்றன. இங்கு ஆத்ம ப்ராப்திகாமனையும் ச்யவநதர்மா என்று சொல்லிற்று. ப்ரஹ்மாநுபவத்தை யிழந்தவன் என்கிற பொருளே இங்கு விவக்ஷிதம். ஆர்த்தன், அர்த்தார்த்தி, ஜிஜ்ஞாஸு என்கிற இம்மூவரும் வஸ்துத: எம்பெருமானை யநுபவிப்பதை யிழந்தவர்களாதலால் அதையிட்டே "த்ரய: ச்யவநதர்மாண:" என்று மோக்ஷ தர்மத்தில் சொல்லிற்று.

94. இதைப்பற்றி கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகர் விமர்சித்தருளுகையில் "ஆத்மமாத்ராநுபவஸுகஸ்ய அஸ்த்திரத்வாதேவ ச்யவநதர்மத்வ முச்யதே......" என்றருளிச் செய்துள்ளார். இது அஸ்வரஸ மென்பதைத் தாமே யுணர்ந்து ஸித்தாந்தமான அர்த்தத்தையும் அடுத்தபடியாக நிர்வாஹாந்தரமாய்த் தாமே யருளிச்செய்தார். "நிரதிசயஸுகாநுபவாத் ப்ரஷ்டத்வேநாபி நிந்தோபபத்தேச்ச" என்ற ஸ்ரீஸூக்தி காண்க. இவ்விஷயத்தில் இவ்வளவே போதுமென்று நிற்கின்றோம். ... ... ... ...

**ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்தெழுதிய ஸ்ரீ லோகாசார்ய ஸித்தாந்த ஸாரம் முற்றிற்று.**

# ஸ்ரீலோகாசார்ய ஸித்தாந்த ஸாரம் - பரிசிஷ்டம்

(ஸ்ரீ லோகாசார்ய ஸித்தாந்தஸ்த்தர்களின் சில அனுஷ்டான விசேஷங்களைப்பற்றின விமர்சம்)

## 1. ஏகாதசீச்ராத்த நிர்ணயம்

1. தாய்தந்தையர் முதலானுர்க்கு ஏகாதசியில் ச்ராத்தம் ப்ராப்தமானுல் அதை அன்று நிறுத்தி மறுநாள் த்வாதசியில் அனுஷ்டிப்பது ஸத்ஸம்ப்ரதாயத்தில் அநாதிஸித்தமான ஆசாரம். ஸுதீவிலோசந மென்கிற க்ரந்தத்தில் *க்வசித்புராணே து த்வாதச்யாமேவ ச்ராத்தம் கார்யம், நைகாதச்யாமித்யுக்தம். தத நாதரணீயம்; புராணாத் ஸ்ம்ருதேர்பலீயஸ்த்வாத்* என்றெழுதப் பட்டுள்ளது. அதாவது, சில புராணங்களில் ஏகாதசியன்று ச்ராத்தம் பண்ணக்கூடாதென்றும் த்வாதசியன்று தான் அது செய்ய வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருப்பதாக எடுத்துக்கூறி அதை மறுக்கின்றுர் ஸுதீவிலோசநகாரர். இவர் புராணத்திற்காட்டிலும் ஸ்ம்ருதி ப்ரபல மென்றும், புராணங்களில் ஏகாதசீச்ராத்த நிஷேதம் காணப்பட்டாலும் ஸ்ம்ருதி களில் ஏகாதசீச்ராத்த அநுமதி காணப்படுகின்றதென்றும் நிருபிக்கிறுர். விசிஷ்டாதிகாரிகளுக்கு ஸ்ம்ருதியைவிட புராணப்ராபல்யம் ஸ்ரீ விஷ்ணுசித்தீயத்தில் ஸாதிக்கப்பட்டது. தசநிர்ணயத்தில் ஸ்ரீ ஜயந்தி விஷயத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஸர்வப்ரகாரவேதத்யாக ரூபமான விசிஷ்டாசாரத்தில் வித்தோபவாஸபர ஸ்ம்ருத்யபேக்ஷயா புராணப்ராபல்யம் இசையப்பட்டிருக்கின்றது. மதாந்தரஸ்தர்களான ஸ்ரீதராதிகளும் ஸ்ம்ருதிகளிற் காட்டில் புராணங்களுக்கு ஏற்றமிசைந்துள்ளார்கள்.

2. ஸ்மிருதிகளிலுங்கூட ஏகாதசீச்ராத்த நிஷேதமும் த்வாதசீச்ராத்த விதியும் காணப்படுகிறது. ப்ருஹத்ஹாரீத ஸ்ம்ருதியில் *ஸூதகாதௌ யதா ச்ராத்தம் ஸூதகாந்தே விதீயதே, ததைவைகாதசீச்ராத்தம் த்வாதச்யாமேவ காரயேத்* என்றுள்ளது. ஹாரீதஸ்ம்ருதியில் *பித்ரோ: ச்ராத்தம் ந குர்வீத ஏகாதச்யாம் த்விஜோத்தம, த்வாதச்யாம் தத்தி குர்வீத நோபவாஸதிநே க்வசித்* என்றது. நிஷ்பக்ஷபாதமாக நாம் சாஸ்த்ரங்களில் நோக்குமிடத்து, ஏகாதசியில் ச்ராத்தம் பண்ணலாமென்கிற வசனங்களும் காணப்படும். இவற்றுக்கு ஸ்மார்த்த வைஷ்ணவ ரூப அதிகாரி பேதேந வ்யவஸ்தையை முன்னோர்கள் அழகாகச் செய்து வைத்திருக்கிறுர்கள். இவ்விஷயத்தில் இன்னமும் விரிவாகத் தெரிந்து கொள்ளவேண்டிய ப்ரமாணோபபத்திகளை ஏகாதசீச்ராத்த நிர்ணயம் முதலான [ஏற்கெனவே அச்சிட்டு வெளியாகி யிருக்கின்ற] க்ரந்தங்களிற் கண்டுகொள்வது. ... ... *

## 2. விதவாவபன விசாரம்

3. விதவைகள் வபநம் செய்வித்துக் கொள்ளுகிற ஆசாரம் ஸத்ஸம்ப்ரதாயத்தில் எஞ்ஞான்றுமில்லை. ஆனுல், வபநவிதாயக ப்ரமாணங்கள் பலவுமுண்டு. நன்கு விமர்சித்துப் பார்க்கையில் அவை அவைஷ்ணவ ஸ்த்ரீவிஷயமாக ஒதுக்கப்பட வேண்டியவைகளாயிருக்கின்றன. ''விதவாகபரீபந்தோ பர்த்த்ருபந்தாய ஜாயதே,

சிரஸோ வபநம் தஸ்மாத் கார்யம் விதவயா ஸதா.'' என்றும், ''ம்ருதம் பர்த்தாரமாதாய ப்ராஹ்மணீ வஹ்நிமாவிசேத், ஜீவந்தீ சேத் த்யக்தகேசா தபஸா சோஷயேத் வபு:'' என்றும், ''ம்ருதே பர்த்தரி யா நாரீ கேசாந் தாரயதே யதி, ஸ யாதி ரௌரவம் பர்த்தா நரகம் நாத்ர ஸம்சய:.'' என்றும், ''ம்ருதே பர்த்தரி நாரீணாம் சிரஸோ வபநம் ஸ்ம்ருதம், கேசதாரணமாத்ரேண தத்பர்த்தா நரகே வஸேத்.'' என்றும், ''ஸகேசா விதவா நாரீ யத்க்ருஹே வர்த்ததே ஸதா, தத்க்ருஹம் நச்யதி க்ஷிப்ரம் நாத்ர கார்யா விசாரணா.'' என்று மிப்படி பல ப்ரமாணங்களை விதவாவபநஸாதகங்களாகக் காட்டுகின்றார்கள்.

4. பராசரஸம்ஹிதை மூன்றாமத்தியாயத்தில் ''ஸ்யாத் க்ஷௌரம் விதவாநாம் து சிரோமாத்ரம் ஸதாப்ஜஜ, சிகாவர்ஜம் மாஸிமாஸி அந்யத்ஸர்வவிதிர் பவேத்.'' என்றொரு ச்லோகம் ஏதோவொரு ரீதியாகக் காண்கிறது. பராசரஸ்ம்ருதியில் ஒன்பதாமத்யாயத்தில் ''ஸர்வாந் கேசாந் ஸமுத்த்ருத்யச்சேதயேதங்குலத்வயம், ஏவம் நாரீகுமாரீணாம் சிரஸோ முண்டநம் ஸ்ம்ருதம்.'' என்னும் ச்லோகத்திற்கு வியாக்யானமெழுதாநின்ற மாதவாசார்யரால் ''ஸ்த்ரீணாம் து வபநே விசேஷமாஹ—ஸர்வாநிதி, நாரீக்ரஹணேநைவ குமாரீணாமபி க்ரஹணே ஸ்த்திதே ப்ருதகுபாதாநம் விதவாஸு வபநாங்கீகாரத்யோதநார்த்தம்,......ததோ விதவாநாம் ஸர்வாத்மநா மௌண்ட்யமங்கீக்ருதம் பவதி.'' என்று ஸ்பஷ்டமாகவே விதவாமுண்டநம் காட்டப்பட்டிரா நின்றது. இதெல்லாம் அவைஷ்ணவ ஸ்த்ரீ விஷயமென்று மற்றும் பலபல ப்ரமாணங்களினால் விளங்காநின்றது. வஸிஷ்டவசனம்—''விதவாயா: ப்ரபந்நாயா யதி ஸ்யாச்சீர்ஷமுண்டநம், தந்முகம் பகவத்பக்தைர் நேக்ஷயேத ப்ரீதயே ஹரே:''. வ்யாஸவசனம்—''சரணாகதிநிஷ்டாநாம் விதவாநாம் மநீஷிபி:, நிர்ணீதம் கேசவபநம் ந கார்யமிதி ஸர்வதா''. ஹாரீதஸ்மிருதி வசனம்—''ஸர்வவேதஸஸத்ரிண்யா: வாநப்ரஸ்த்தாச்ரமஸ்யச, ப்ரபந்நவிதவாநாஞ்ச ந கார்யம் கேசகண்டநம்''. ககேச்வர ஸம்ஹிதாவசனம்—''ப்ரயோஜநாந்தராஸக்தா விதவா வாபயேச்சிர:, முமுக்ஷுர் யதி ஸா தஸ்யா வபநம் து நிஷித்த்யதே''. அனந்த ஸம்ஹிதா வசனம்—''ப்ரபந்நா பர்த்ருரஹிதா நாரீ துருபதேசத:, ந தாரயதி யா கேசாந் ஸா யாதி நரகம் த்ருவம். ந கார்யம் கேசவபநம் வைஷ்ணவ்யா பர்த்ருஹீநயா, யத்யஜ்ஞாநாத் கரோத்யேஷா தந்முகம் நாவலோகயேத்'' ''இந்த்ரியாணாமஜய்யத்வாத் சலத்வாதபி சேதஸ:, புருஷாந்தரகர்த்தவ்யம் வாபநம் வைஷ்ணவீ த்யஜேத்'' என்றிப்படிப்பட்ட பல வசனங்கள் [விதவாவபனம் கூடாதென்று காட்டுமவை] சில மஹான்களால் எடுத்தாளப்படுகின்றன. இந்த வசனங்களெல்லாம் கல்பிதங்களென்றும் அப்ரமாணமென்றும் பிறர் கூறுவர். ஆகரம் நம்மால் நிஷ்கர்ஷிக்கப் போகாது. ஆகவே இந்த வசனங்களை யெல்லாம் நாம் ஒதுக்கிவைத்திட்டு ஸாரமாக ஒரு விமர்சம் தெரிவிக்கிறோம்.

5. ''ம்ருதம் பர்த்தாரமாதாய ப்ராஹ்மணீ வஹ்நிமாவிசேத், ஜீவந்தீ சேத் த்யக்தகேசா தபஸா சோஷயேத்வபு:'' என்று முன்னம் காட்டின ச்லோகத்தினால் 'விதவையானவள் உடன்கட்டை யேறவேண்டும்; இல்லையாகில் தலையை முண்டனஞ் செய்துகொண்டு ஒடுங்கிக் கிடக்கவேண்டும்' என்று சொல்லப்படுகிறது.

இங்குச் சொன்ன உடன்கட்டை யேறுதலென்பது யார்க்கு ஒக்கும், யார்க்கு ஒவ்வாதென்பது விமர்சிக்கப்படவேண்டும். *ப்ரேதஸ்யோத்தரத: பத்ந்யாஸ்ஸம்வேசநம விசேஷண நித்யவத்* என்கிற கல்பஸூத்ரத்தினால், நாயகனை யிழந்த நாயகிகளனைவர்க்குமே உடன்கட்டை யேறுதல் வேண்டுமென்று சொல்லப்படுகிறது.

6. பராசரஸ்மிருதியிலும் நான்கா மத்தியாயத்தில் *திஸ்ர: கோட்யோர்த்தகோடீ ச யாநி லோமாநி மாநுஷே, தாவத்காலம் வஸேத் ஸ்வர்கே பர்த்தாரம் யாநுகச்சதி. 30. வ்யாலக்ராஹீ யதா வ்யாலம் பலாதுத்தரதே பிலாத், ஏவம் ஸ்த்ரீ பதிமுத்த்ருத்ய தேநைவ ஸஹ மோததே. 31* என்கிற ச்லோகங்களாலும் இங்ஙனே சொல்லப்படுகிறது. அவ்விடத்திற்கு வியாக்கியான முரைத்த மாதவாசார்யரும் இதற்குச் சார்பாகப் பல பிரமாணங்களை யெடுத்துக்காட்டி உடன்கட்டை யேறுதல் ஆவச்யகமென்றே ஸ்தாபித்தார். முடிவில் *பாலாபத்யாச்ச கர்ப்பிண்ய: அத்ருஷ்டருதவஸ்ததா, ரஜஸ்வலாராஜஸூதே நாரோஹந்தி சிதாம் சுப.* என்னும் நாரதீய வசனத்தை யெடுத்துக்காட்டி ராஜகுமாரி முதலான சிலர்க்கு அநுமரணத்தில் உரிமையில்லை யென்றுரைத்தார். இது நிற்க.

7. விஜ்ஞாநேச்வரீயத்தில் அநுமரண ப்ரகரணத்தில் பர்த்தாவையிழந்த பெண்டிர் உடன்கட்டை யேறவேண்டுமென்று நெடுக உபபாதித்துக்கொண்டு போய் நிகமனத்தில்—*தஸ்மாத் அநித்யால்பஸுகஸ்வர்கார்த்தமாயுர்வ்யயோ ந கர்த்தவ்ய இத்யர்த்த:, அதச்ச மோக்ஷமநிச்சந்த்யா அநித்யால்பஸுகஸ்வர்கார்த்திந்யா: அநுகமநம் யுக்தம், இதரகாம்யாநுஷ்டாநவத், இதி ஸர்வமநவத்யம்.* என்று முடித்ததனால் முமுக்ஷுக்களான பரமைகாந்தி ஸ்ரீ வைஷ்ணவ பத்நிகளுக்கு உடன்கட்டை யேறுதல் ஒவ்வாதென்று நிஷ்கர்ஷிக்கப் பட்டதாயிற்று. ஆகவே முன்ன மெடுத்துக்காட்டின *ம்ருதம் பர்த்தாரமாதாய* இத்யாதிச்லோகம் ப்ரயோஜநாந்தரபரஸ்த்ரீ விஷயமேயன்றி ஸ்ரீ வைஷ்ணவஸ்த்ரீபரமன்றென்பது நன்கு விளங்கிற்றும். யார்க்கும் அநுமரணம் கூடாதென்று வலிதான ராஜசாஸநம் ஏற்படுவதற்கு முன் பலவிடங்களில் பலஸ்த்ரீகள் அநுமரணம் செய்துகொண்டேயிருந்தனர். ஆனால் அவ்வாசாரம் ஸ்ரீ வைஷ்ணவஸ்த்ரீகளில் எக்காலத்திலும் புகவில்லை. இவ்வநுமரணம் போலவே வபநமும் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்த்ரீகளுக்கு வர்ஜநீயமாயிற்று. இந்த நிருபணத்தினால் *ந கார்யம் கேசவபநம் வைஷ்ணவ்யா பர்த்ருஹீநயா* இத்யாதிவசனங்கள் ப்ராமாணிகங்களே யென்று கொள்ளத் தட்டில்லை.

8. *கலௌ பாராசரம் ஸ்ம்ருதம்* என்று இக்கலியுகத்திற்கு முக்கியமாகச் சொல்லப்பட்ட பராசரஸ்மிருதியில் நான்காமத்யாயத்தில் *நஷ்டே ம்ருதே ப்ரவ்ரஜிதே க்லீபே ச பதிதே பதௌ, பஞ்சஸ்வாபத்ஸு நாரீணாம் பதிரந்யோ விதீயதே.*(28) என்றொரு ச்லோகமுள்ளது. பர்த்தா தேசாந்தரஞ்சென்று காணுதொழிந்தாலும் மரணமடைந்தாலும் துறவறம் பூண்டாலும் நபும்ஸகனாயிருந்தாலும் பதிதனாய்விட்டாலும் இவ்வைந்து ஆபத்காலங்களில் ஸ்த்ரீகள் மறுவிவாஹம் செய்துகொள்ள வேண்டுமென்று இந்த வசனத்தினால் விதிக்கப்படுகிறது. இப்படிப்பட்ட வசனங்களுக்குத் தோள் தீண்டிகளே விதவாவபந விதிவசனங்களும் என்று நம் ஸம்ப்ரதாயஸ்தர் அறுதியிட்டுள்ளார்கள்.

9. கீழ் நாம் எடுத்துக்காட்டின வசனங்களில் *இந்த்ரியாணுமஜய்யத்வாத் இத்யாதியான வசனம் எங்குள்ளதென்பது நமக்குத் தெரியவில்லையாயினும் அதில் சொல்லுகிற அர்த்தம் மிகவும் ஸமஞ்ஜஸமானதென்பதில் யார்க்கும் விப்ரதிபத்தியிராது. தனியிடத்திலே ஒரு ஆண்பிள்ளையான நாபிதன் கையிலே தலையைக் கொடுப்பதென்பது அபாயாஸ்பதமானது என்று மஹர்ஷிகள் கண்டறிந்து பேசினவிதில் விஸம்வாதமுண்டோ? இந்த அபாயம் ஸ்த்ரீஸாமாந்யத்துக்கும் ஸம்பாவிதமாயினும் *வபநம் வைஷ்ணவீ த்யஜேத்* என்று விசேஷித்து ஸ்ரீ வைஷ்ணவஸ்த்ரீகளுக்கு வபநம் வேண்டாவென்றது *விதுஷோதிக்ரமே தண்டபூயஸ்த்வம்* என்ற கருத்தினாலாம்.

10. இவ்விஷயத்தில் இனிதாக வொன்று சொல்லி முடிப்போம். விதவைகளுக்கு வபநம் செய்கையும் செய்யாமையுமாகிய இவ்விருவகை யனுஷ்டானங்களும் சிஷ்ட பரம்பரைகளிலே நெடுநாளாகவே நிகழ்ந்து வரக் காணாநின்றோம். இவ்வநுஷ்டானங்களைப் பரஸ்பரம் நிர்மூலமென்று தூஷிக்க வொண்ணாதபடி சாஸ்த்ரங்களிலே விதிநிஷேதங்களும் விளங்கக் காணாநின்றோம். இவை *ஔதும்பரீம் ஸ்ப்ருஷ்ட்வோத்காயேத்* *ஔதும்பரீ ஸர்வா வேஷ்டயிதவ்யா* என்பனபோலே பரஸ்பரவ்யாஹதங்களல்ல. உபாயாந்தரங்களினுடையவும் ப்ரபத்தியினுடையவும் விதிசாஸ்த்ரங்கள் போலே அதிகாரி பேதத்தையிட்டு உபபந்நங்களாகக் கூடியவை. ஆனபின்பு அவரவர்கள் ஸ்வஸ்வாதிகாராநுகுணமான நிலையிலே நிற்கிறார்களென்று பரஸ்பரம் இகழ்ச்சியின்றியே யிருக்க ப்ராப்தம். யஜ்ஞபசுஹிம்ஸை பாபமன்றென்றும் புண்யதமமே யென்றும் வைதிக ப்ரதிபத்தி குறையற்றிருந்தாலும் ப்ரமாணங்களுள் ஒன்றான *ஆத்மநஸ் துஷ்டிரேவ ச* என்று சொல்லப்பட்ட ஆத்மஸந்துஷ்டி யில்லாதவர்கள் அதனைப் பாபம்போலவே வெறுத்து விட்டொழிதல் போல, விதவாவபநம் சாஸ்த்ர ப்ரதிபந்நமாயிருந்தாலும் அபாயபஹுளமாகையாலே இது நமக்கு வேண்டா வென்று ஸத்ஸம்ப்ரதாய பரம்பரையில் மஹநீயர்களால் விலக்கப்பட்டதென்று கொள்ளக் கடவது. இது சாஸ்த்ரங்கள் காட்டின வழியாகவு மிரா நின்றது. ... ... ... ... (18)

# 19. மந்த்ரஜப விஷயம்

11. திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் முதலான மந்த்ரங்களை இதர ஸம்ப்ரதாயஸ்தர்கள் விசேஷித்து ஜபம் பண்ணவும், அப்படிப்பட்ட ஜபத்தில் நம்முடையவர்கள் நோக்கின்றிக்கே யிருக்கவும் காணாநின்றோம். திருவாய்மொழியில் (1—2—10) *எண் பெருக்கந்நலத்து* என்கிற பாட்டின் ஈடுமுப்பத்தாறாயிரப்படியில் திருமந்த்ரார்த்த மஹிமையை நிருபித்தருளுமிடத்தில் இத்தைப் பிறர் ஜபஹோமாதிகளாலே விநியோகங் கொள்ளுகிறார்களென்றும், நம்மவர்கள் இதின் அர்த்தாநுஸந்தானத்தாலே போது போக்கி வருகிறார்கள் என்றும் நம்பிள்ளை தாமே ஸ்பஷ்டமாக அருளிச்செய்திருக்கையாலே நம்முடைய ஸம்ப்ரதாய பரம்பரையிலே மந்த்ர ஜபங்களிலே விசேஷித்து ஊன்றியிருக்கை ப்ராப்தமாகவில்லை யென்றுணர்க.

12. ஸ்வாமி யெம்பெருமானார் அருளிச் செய்த நித்ய க்ரந்தத்தில் "அஷ்டோத்தரசதம் மூலமந்த்ரமாவர்த்ய" என்றருளிச் செய்திருக்கையாலே நித்யாநுஷ்டானத்தில் திருமந்த்ரத்தை ஆவ்ருத்தி பண்ணுகிற அநுஷ்டானம் நிரவத்யமே.

# 20. அத்ருஷ்டார்த்த நடவடிக்கை

13. பரமபுருஷார்த்தமான அரும்பெரும்பேறு பெறுதற்கு உறுப்பாக நாம் ஒரு ஸதாசார்யரை ஆச்ரயிக்கிறோம்; என்றைக்கு ஆச்ரயிக்கிறோமோ அன்றைக்கு நமக்கு ஸமாச்ரயணமானதாகத் தொன்றுதொட்டு வ்யவஹாரம் நிகழ்ந்துவருகிறது. திருவாழி திருச்சங்குகளினால் இலச்சினை பெறுகையாகிற சக்கராங்கனத்தையே ஸமாச்ரயணமென்று உலகம் க்ரஹித்திருக்கின்றது. உண்மையில் ஸமாச்ரயணமென்பது அவ்வளவேயன்று. "ஆசார்யனை ஆச்ரயித்து அவன் மூலமாக எம்பெருமானையடிபணிதல்" என்னும் பொருளதான ஸமாச்ரயணமென்கிற சொல்லானது ஆசார்யனால் பெறுவிக்கப்படுகிற பேறுகளுக்கெல்லாம் ஸூசகமாக நிற்கின்றது. ஆசார்யனால் க்ருதக்ருத்யனாகச் செய்விக்கப் பெறுகையே ஸமாச்ரயணமெனப்படுகிறது. பகவதாச்ரயணத்தில் பர்யவஸிதமாகிறது. இந்த ஸமாச்ரயணத்தையே பஞ்ச ஸம்ஸ்காரமென்கிற சொல்லாலும் வழங்கிவருகிறார்கள். "தாப: புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாகச்ச பஞ்சம:, அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:" என்று யாவருமறிந்த ச்லோகமானது பஞ்ச ஸம்ஸ்காரங்கள் இன்னின்னவை யென்பதை விவரித்துக் காட்டுகின்றது. தாப: என்பது முதல் ஸம்ஸ்காரம். அதுதான் தப்தசக்ராங்கனமென்பது. திருவிலச்சினை யென்பது ஸம்ப்ரதாயவழக்கு. இரண்டாவதான புண்ட்ரஸம்ஸ்காரமாவது த்வாதசோர்த்வபுண்ட்ரதாரணம் செய்வித்தல். மூன்றாவதான நாமஸம்ஸ்காரமாவது 'இந்த சிஷ்யன் ஸ்ரீவைஷ்ணவனாயினான்' என்பதை விளங்கக் காட்டுகின்ற தாஸ்யநாமகரணம். அவரவர்களின் ஸம்ப்ரதாயப்படி ராமாநுஜதாஸ னென்றும் மதுரகவிதாஸனென்றும் ஸ்ரீவைஷ்ணவ தாஸனென்றும் இப்புடைகளிலே வழங்கிவருவன காண்க. இனி நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரமாவது—திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற ரஹஸ்யத்ரயத்தை உபதேசிக்கப் பெறுகை. ஐந்தாவதான யாகமாவது, 'யஜ—தேவபூஜாயாம்' என்கிற தாதுவிலிருந்து தேறுகிற யாகசப்தம் திருவாராதனத்தைச் சொல்லுகிற தாகையாலே, பகவதாராதனத்திற்கு அதிகாரம் பெறுகை. இதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் கூறுவர். அது நிற்க.

14. இவற்றுள் நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரத்தில் த்வயமென்கிற மந்த்ரரத்நமே மிகச் சிறந்தது. ஸமாச்ரிதனான சிஷ்யனை அந்த மந்த்ரரத்நமே க்ருதக்ருத்யனாக்குகின்றதாக நம் ஆசார்யர்களனைவருடையவும் ஸமகண்டமான ஸித்தாந்தம். இதனாலேயே ஸமாச்ரயண நிஷ்பத்தி யென்றுணர்க. இதுதன்னை ரஹஸ்ய க்ரந்தத்திலே ஸுவ்யக்தமாக எழுதிவைத்து சிலாலிகிதமாக்கிவைத்தார் வேதாந்த தேசிகன். எங்ஙனே யென்னில்; ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்திலே—

"அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப் போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத்க்ருபையடியாக வுண்டான ஸதாசார்ய கடாக்ஷவிஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணு நூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதநங் களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹ ஹேதுக்களை யெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்த வடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஸர்வ சேஷியான ச்ரிய:பதி தன்பேருகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனு யிருகைவென்கை. இது *மா சுச:* என்கிற சரண்யவாக்யத்திலும் தீர்ந்தபொருள்."

என்றுள்ள வாக்கியங்கள் நிஸ்ஸந்தேஹவிபர்யயமாக உண்மைப் பொருளை யுணர்த்துகின்றன. மேலே உதாஹரித்த வாக்கியராசியில் "த்வயோச்சாரணு நூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்த பின்பு" என்றும் "சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்கு மேல் ஒன்றில்லாமையாலே" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் ஸாரமானவை. மந்த்ரஸம்ஸ்கார ஸமயத்தில் த்வயமென்னும் மந்த்ரத்தை ஆசார்யன் சொல்ல அதை சிஷ்யன் பின் சொல்லுவதுண்டே இதுதான் ப்ரபத் த்யநுஷ்டானமென்று சொன்னதோடு நில்லாமல் இதற்குமேல் வேறொன்று கிடையா தென்றும் ஸுவ்யக்தமாக அருளிச் செய்தாராயிற்று.

15. இப்படியிருக்க, நவீனர்கள் அத்ருஷ்டார்த்தமென்று ஒன்று நடத்திப் போருவதானது சாஸ்த்ரங்களிலும் ஸதாசார்யாநுஷ்டாந பரம்பரையிலும் எங்கும் அத்ருஷ்டமான அர்த்தமாதலால் அத்ருஷ்டார்த்த மென்று இதற்குப் பெயரிட்டது மிகவும் பொருத்தமானதே. எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரையிலே ஜனித்த வர்களுக்கு ப்ரபந்நத்வமோ சரணாகதத்வமோ ஜன்மஸித்தமேயாகும், அன்னவர்கள் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொள்வதானது வைஷ்ணவ தீக்ஷார்த்தமாக வத்தனே யல்லது மோக்ஷஸாதனமாகவன்று. நம்முடைய குலகூடஸ்தரான எம்பெருமா னார்க்கு ஸ்ரீரங்கநாதனிடமிருந்து விசேஷித்து வரமும் கிடைத்திருக்கிறது. அதையும் தேசிகனே ந்யாஸதிலகத்தில் "ச்ருத்வா வரம் தததநுபந்நமதாவலிப்தே" என்பதனல் நன்கருளிச் செய்துள்ளார்.

16. ந்யாஸதிலகமென்கிற அந்த திவ்யக்ரந்தத்தில் *அந்தோநந்தக்ரஹண* என்றும், *உக்த்யா நநஞ்ஜய* என்றுமுள்ள இரண்டு ச்லோகரத்னங்கள் நிதியானவை. அவற்றின் விவரணம் வருமாறு;

"அந்தோநந்தக்ரஹணவசகோ யாதி ரங்கேச யத்வத்
பங்குர் நௌகாகுஹரநிஹிதோ நீயதே நாவிகேந,
புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்யார்ப்பகாதி:
த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேசிகோ மே தயாலு:"

இந்த ச்லோகத்தின் கருத்தைக் கேண்மின்; குருடன் தனக்கு ப்ராப்யமான வோரிடத்தை யடையவேண்டில், தானே நடந்துசெல்ல அசக்தனாகையாலே கண் தெரிந்தவனும் நடக்கவல்லவனுமான வொருவனைத் துணைகொண்டு சென்று

ப்ராப்ய ஸ்தலத்தையடைகிறுன். நொண்டியான வொருவன் தான் கண் தெரிந்த வனுயினும் நடந்து செல்லக் காலில்லாதவனுகையாலே தனக்கு ப்ராப்யமான வோரிடத்தை யடையவேண்டும்போது கண்தெரிந்தவனும் கால்நடை வல்லவனு மான வொருவனது உதவியைப்பெற்று [அதாவது ஓர் தோணியிலே உட்காரவைக் கப்பெற்று] ஸ்வப்ராப்யபூமியைப் பெறுகிறுன். இவ்விரண்டு த்ருஷ்டாந்தங்கள் இந்த ச்லோகத்தின் முன்னிரண்டு பாதங்களில் தெரிவிக்கப்பட்டன. இவற்றுல், ஜ்ஞாநஹீநனுன வொருவன் குருடனுடைய ஸ்தானத்திலும், ஆசாரஹீநனுன வொருவன் நொண்டியினுடைய ஸ்தானத்திலும் கொள்ளப்படவேண்டியதாகத் தேறும். இப்படிப்பட்ட அதிகாரிகள் ஞானமனுட்டானமிவை நன்றுகவே யுடைய ஞன குருவையடந்தே புருஷார்த்தஸித்தி பெறவேண்டுமென்றதாயிற்று.

17. இதற்குமேல் மூன்றுவதான வொரு த்ருஷ்டாந்தம் மூன்றுவது பாதத் தில் வெகு அற்புதமாகக் காட்டப்பட்டிருக்கிறது. [புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:] ஓர் அமாத்யன் நெடுநாள் ராஜஸேவைபண்ணி அபரிமிதமான பொருளீயீட்டிச் சேமவைப்பாக வைத்து ''இதன் ஆதாயத்தை என்னுடைய புத்ர பௌத்ராதிஸந்தானம் நீடூழிகாலம் அநுபவிக்கக் கடவது'' என்று திடமான வ்ய வஸ்தையைச் செய்து போகிறுன். அப்படியே அந்த ஆதாயத்தை அவ்வமாத்ய னுடைய ஸந்தானம் நீண்டகாலம் அநுபவித்துவருகிறது—என்கிற இந்த த்ருஷ் டாந்தத்திஞல் ப்ரக்ருதோபயோகியாகத் தெரிவிக்கப்படுகிற விஷயம் அடுத்த ச்லோகத்திஞல் அவர்தம்மாலேயே ஸ்பஷ்டமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஒரு மஹாப்ரபுவினிடத்தில் ஸேவைபண்ணி மஹத்தான பேறுபெற்ற அமாத்யன்— என்றவிதில், மஹாப்ரபுவின் ஸ்தானத்தில் ஸ்ரீரங்கநாதனும், ஸேவைபண்ணின அமாத்யன் ஸ்தானத்தில் எம்பெருமானுரும், மஹத்தானபேறு என்பதன் ஸ்தானத் தில் முமுக்ஷுக்களின் பரம புருஷார்த்தமும், ஸந்தானஸ்தானத்தில் அஸ்மதாதி களும் கொள்ளப்பட வேண்டுமென்பது எளிதாகத் தேறுகிறது.

18. இதில் ''அவிதிதந்ருப:'' என்கிற விசேஷணம் வெகு ஆச்சரியமாயிருப்பதோடு தத்வார்த்தத்தை நெஞ்சில் நன்றுகப் பதியவைப்பதாயுமிருக்கிறது. ராஜஸேவை பண்ணின அமாத்யனுடைய ஸந்ததியார்கள் ஆதாயத்தையநுபவிக்கும்போது அந்த ராஜாவின் முகத்தைப் பார்த்திருக்கவேண்டியதில்லையன்றே; அந்த ராஜா வைப்பற்றி ஒன்றுமே தெரிந்துகொண்டிருக்க வேண்டியதில்லையே. 'தான் அந்த அமாத்யனுடைய ஸந்ததியே' என்னுமிடத்தை மூதலிக்கவேண்டியதொன்று தவிர வேறுருக்ருத்யமும் இல்லையன்றே ஸந்ததியார்க்கு; இதுதான் 'அவிதிதந்ருப:' என் கிற விசேஷணத்திஞல் தெரிவிக்கப்படுகிறது. இது போலவே, அமாத்யஸ்தாநீய ரான எம்பெருமானுருடைய ஸந்ததியான நாமும், 'நாம் எம்பெருமானுரைச் சேர்ந்தவர்கள்' என்பதை மூதலிப்பது தவிர பேற்றின் ஸித்திக்காகப் பெருமா ளுடைய திருமுகத்தையும் காணவேண்டிய ஆவச்யகதையில்லையென்று ஸ்பஷ்ட மாகத் தெரிவித்ததாகிறது. *புங்க்தே போகாந் ந்ருபதிஸவிதே ஸேவகஸ்யார்ப்ப காதி:'' என்றுவது, ந்ருபதியினுடைய ப்ரஸ்தாவமேயில்லாமலாவது ச்லோகமியற்றி யிருக்கலாமே; அப்படியின்றிக்கே ''அவிதிதந்ருப:'' என்கிறவொரு விசேஷணமிட் டிருப்பதானது ச்லோகபூரணுர்த்தமன்று; ''அலங்கார: பரிகரஸ் ஸாபிப்ராயே விசேஷணே''

என்கிற லக்ஷணத்தின்படி அணிபெறவன்றோ இவ்விசேஷணமிட்டிருப்பது. ராஜ ஸேவைபண்ணிப் பொருள் படைத்த அமாத்யனுடைய ஸந்ததியார் முக்திகல்ப மான போகங்களையநுபவிக்குமிடத்து இவர்களும் ராஜஸேவை பண்ணவேணு மென்பதில்லையே. அரசனைக் காண்கைதானும் அநபேக்ஷிதம். ராஜஸேவை பண்ணிப் பொருளீட்டிச் சேமித்துவைத்தவனோ ப்ரதாநனான வொருவன். அவ னோடு குடல்துடக்குடையாரெல்லாரும் ராஜஸேவா நிரபேக்ஷர்களாகவும் ராஜமுக நிரீக்ஷணங்கூட வேண்டாதவர்காகவும் இருந்து பலபல போகங்களை யநுபவிக்கக் காணாநின்றோம். இதனை த்ருஷ்டாந்தீகரித்திருக்கின்ற தேசிகனுடைய திருவுள்ளம்-பகவதநுவர்த்தநம் பண்ணி ஆசார்யஸார்வபௌமரான எம்பெருமானார் ஸம்பா தித்துச் சேமித்துவைத்த அருளென்னும் அரும்பெரும் பொருளை ததநுபந்திகளனை வரும் அவ்வநுபந்த மாத்ரமேயடியாக பகவதநுவர்த்தந நிரபேக்ஷர்களாய்ச் செவ் வனே அநுபவிக்கக் கடமைப்பட்டுள்ளார்கள் என்னுமித்தனையே.

19. 'நாம் பகவத்ஸேவையும் செய்து போருகிறோமே; இது தவறுதானோ? இதையும் விட்டுவிட வேண்டியதுதானோ?' என்று சிலர் சோத்யம் செய்யக்கூடும். இது மிக அற்பமான சோத்யம்; நாம் செய்துவருகிற பகவத் ஸேவையானது புருஷார்த்தஸாதநமாகவன்று. ஸ்வயம் போக்யமாகச் செய்துவருகிறோமத்தனை. கீழே சொல்லப்பட்ட அமாத்யனுடைய ஸந்ததியார் ராஜமுகநிரீக்ஷணாதிகள் பண்ணவேண்டாமலிருக்கச்செய்தேயும் போதுபோக்குக்காக அவை செய்து போந் தார்களாகில் ப்ரத்யவாயமுண்டோ? எந்த காரியமும் ஸாதநமாகத்தான் செய்ய வேண்டுமென்கிற நிர்பந்தமுண்டோ? அஃது இல்லையே.

20. மற்றொரு விசேஷமும் இங்கே குறிக்கொள்ளத்தக்கதுண்டு; "காகேப் ப்யோ ததி ரக்ஷ்யதாம்" [தயிரைக் காக்கை குடியாதபடி காவல் செய்] என்பது போன்றவிடங்களில் சாஸ்த்ரஜ்ஞர்கள் அஜஹல்லக்ஷணையென்று கொண்டு "காக பதம் தத்யுபகாதகே பிடாலாதௌ லாக்ஷணிகம்" [காக்கையைச் சொன்னதானது தயிரைக் கெடுக்கவல்ல பூனை முதலானவற்றையும் தெரிவிக்கக்கூடியதே] என்று நிர்ணயித்திருக்கிறார்கள். அதுபோல "அவிதிதந்ருப:" என்னுமிடத்தில் ந்ருபபத மானது ஸேவகனையும் லக்ஷணயா காட்டித் தீரும்; *[அவிதிதந்ருப: அவிதிதஸேவகச் சேத்யுக்தம் பவதி]* இது லௌகிக த்ருஷ்டாந்தமேயாதலால் லோகத்ருஷ்டிக்கு அநுகுணமாகவே பொருள்கொள்ள வேண்டுதலால் இது மிகவும் பொருத்த மானது. ராஜஸேவை செய்த அமாத்யன் ஈட்டின பொருளைக்கொண்டு போகங் களை யநுபவிக்கின்ற தத்ஸந்ததியார்கள் அரசனைக் கண்டிருக்கவேண்டாமைபோ லவே ராஜஸேவை செய்த ஸ்வமூலபுருஷனையும் கண்டிருக்க வேண்டாவே. இதனால் ஆசார்யஸார்வபௌமரோடு வ்யவஹிதஸம்பந்தம் பெற்றவர்களும் ஸம்பந்த மாத்திரமே கொண்டு பேறுபெற்றுத் தீருவர்கள் என்னுமிடமும், அவர்கள் அவ் வாசார்யனுடைய ஸம்பந்தமொன்றையே ஒருவாறு பெற்றிருக்க வேணுமென்னு மிடமும் தெரிவிக்கப்பட்டதாகிறது.

21. இன்னமும் "ஸேவகஸ்ய ஆத்மஜாதி:" என்னுதே (அர்ப்பகாதி:) என்ற திலும் ஓர் அற்புதமான கருத்து அமைந்துள்ளது. இந்த ச்லோகத்தின் முன் பாதங்

களில் குறிக்கப்பட்டுள்ள குருடனும் நொண்டியும் வழிதெரிந்து தாமே நடக்க வல்லமையற்றவர்களாயினும் 'என்னை வழிநடத்தியருளவேணும்' என்று வாய் திறந்து இரந்து நிர்ப்பந்திக்க வல்லவர்களே யென்பது விவாதமற்ற விஷயம். அங்ஙனே வாய்திறக்கவும் வல்லமையற்ற சிறு குழந்தையை [அர்ப்பகனை]க் கடைசியாக த்ருஷ்டாந்தீகரித்ததனுல், அதுபோலே நாம் ப்ரார்த்தனையும் செய்யாதேயிருக்கவேணுமென்றும் அபேக்ஷாநிரபேக்ஷமாகத்தானே பேறு வந்தேதீருமென்றும் தெரிவித்தபடி. தேசிக திவ்யஸூக்தியாதலால் இன்னமும் ஆழ்ந்து ஆராயில் சீரிய பொருள்கள் பல பெறலாகும்.

22. இனி அடுத்த ச்லோகத்திற்குச் செல்வோம்;

[உக்த்யா தநஞ்ஜயவிபீஷணலக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம். ச்ருத்வா வரம் ததநுபந்தமதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத.]

என்னுமிந்த ச்லோகம் ஐதிஹ்ய கர்ப்பமாக அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானர்க்கு ஒரு வரம் கொடுத்தருளினதாக இதில் கூறப்பட்டுள்ளது. அந்த வரம் இன்னதென்பதை வியாக்கியான கர்த்தாக்களான முன்னோர்கள் ஸ்பஷ்டமாக எழுதிவைத்துள்ளார்கள். ந்யாஸதிலகம் பலவியாக்கியானங்களுடன் திருக்குடந்தையில் தேசிகஸம்ப்ரதாயாபிவர்த்திநீஸபா வித்வான்களால் பரிசோதித்து அச்சிடப்பட்டிருக்கிறது. அதிலொரு ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்தில்—"ஸ்ரீராமாநுஜார்யாய சீத்ருசவரப்ரதாநமிதி சேதித்தம்:—போ யதீந்த்ர த்வயா பவதாந்தசாஸ்த்ரரஹஸ்யபூதப்ரபத்தி சாஸ்த்ரார்த்தப்ரதிஷ்டாபநாத் ஹேதோ: மாம் அவிகலம் ப்ரபந்நஸ்ய தவ அபிமாநே ஸித்தாந்தே ச ஸாக்ஷாத் பரம்பரயா வா யேயே அந்தர்ப்பூதா: தே ஸர்வேபி தேஹாவஸாந ஏவ த்வத்ஸம்பந்திஸம்பந்தாத் மோக்ஷம் யாந்த்விதி வரம் ஆப்த பரம்பராச்ராவிதம் ச்ருத்வா". என்று ஸுஸ்பஷ்டமாகவும் நிஸ்ஸந்தேஹமாகவும் எழுதப்பட்டிருக்கின்றது. ஐதிஹ்யமொன்று இருப்பதாக மூலத்திலேயே காட்டிற்று. அதுதானும் கர்ண பரம்பரையினுல் கேட்டறியத்தக்கதென்று (ச்ருத்வா என்பதனுல்) சொல்லிற்று. அந்த ஐதிஹ்யம் அப்படியோ இப்படியோவென்று நாம் விவாதப்பட வேண்டாதபடி பண்டே ப்ராமாணிகர்கள் பிரசுரமாக்கி வைத்தார்கள். எம்பெருமானரோடு ஸாக்ஷாத்ஸம்பந்தமோ பரம்பராஸம்பந்தமோ பெற்றவர்களுக்கெல்லாம் மோக்ஷமுண்டாகுமென்பது வரப்ரகாரம். இது இவ்விதமாகவல்லாமல் வேறுவிதமாக இருக்கமுடியாது; ஏனென்னில், "ச்ருத்வா வரம்" என்றவுடனே "ததநுபந்தமதாவலிப்தே என்றருளிச் செய்திருப்பதே வரப்ரகாரத்தை ஸுஸ்பஷ்டமாகக் காட்டிக் கொடுக்கின்றது. அநுபந்தமாவது ஸம்பந்தம்; தேசிகனுக்கு ஸ்ரீபாஷ்யகாரரோடு ஸாக்ஷாத்ஸம்பந்தமில்லையென்பது நிர்விவாதம். பரம்பராஸம்பந்தத்தைக் கொண்டு தாம் செருக்குற்றிருப்பதாகச் சொல்லும்போது, ஸ்ரீராமாநுஜரோடு பரம்பராஸம்பந்தமுடையார்க்கும் முக்தியுண்டு—என்னுமர்த்தம் ஸித்தித்திருக்க வேண்டியது ஆவச்யகமாயிற்று. அப்படியில்லையாகில் "ததநுபந்த மதாவலிப்தே" என்றவிது ச்லோகபூரணார்த்தமான சவைதுஹிக்கள் போலவேயாகுமத்தனை.

23. பொதுவாக, பகவானிடத்தில் சரணாகதி செய்தவர்களோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் முக்தியுண்டென்பது ஸம்ப்ரதிபந்நமானது. ஸ்ரீபாஷ்யமங்களச்லோகத்தில் ''விநதவிவிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே'' என்றவிடத்து ச்ருதப்ரகாசிகையிலும் தத்வடீகையிலும் ஸுஷ்டு ப்ரதிஷ்டாபிதமான விஷயம் இது. விசேஷித்து எம்பெருமானாரோடு ஏதேனுமொருபடி ஸம்பந்தமுடையார்க்கு முக்தி கரஸ்த்தமென்பதும் பூர்வாசார்யஸூக்தி ஸித்தமாயிராநின்றது.

24. சரணாகதிகத்யத்தில் ''தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே'' என்றவிடத்து ச்ருதப்ரகாசிகாஸூக்தி வருமாறு—''ஸம்பந்திஸம்பந்தி நிஸ்தரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம்'' என்று. ''ஸம்பந்தி ஸம்பந்தி ஸம்பந்தி ஸம்பந்தி...'' என்று ஸுதீர்க்க ஸந்தாநமாக வசநவ்யக்தி காணவில்லையேயென்று எண்ணவேண்டா. மீமாம்ஸையில் ''ஸப்ததசாரத்நிர்வாஜபேயஸ்ய யூபோ பவதி'' என்ற ச்ருதிவாக்யத்தைப் பற்றின விசாரத்தில் உள்ள நிஷ்கர்ஷம் உணரத்தக்கது. ''ராமாநுஜஸ்ய அயம்'' (அல்லது) ''ராமாநுஜஸம்பந்தீ அயம்'' என்கிற வ்யவஹாரம் ஆழ்வான் எம்பார் ஆண்டான் பிள்ளான் ஆச்சான் முதலானவர்களிடத்திற்போலே தேசிகனிடத்திலும் அவ்யாஹதம்; இன்றுள்ள அஸ்மதாதிகளிடத்திலும் அப்ரதிஹதம்; இனி ஏழேழ் பிறவிக்கு அப்பால் ஜநிக்கப்போகிற ஸ்ரீ வைஷ்ணவ சிசுவினிடத்திலும் அநபாயம். ஸம்பந்தத்தில் வ்யவஹிதத்வ அவ்யவ்ஹிதத்வங்கள் அப்ரயோஜகம். எம்பெருமானாருடைய ஸம்பந்திகளுக்கு அந்த ஸம்பந்தமே ஹேதுவாக ஸத்கதியுண்டென்று இசையுமவர்கள் அந்த ஸம்பந்தத்திற்கு ஒரு அவச்சேதமிட நினைப்பது தகுதியற்றது.

25. உபாயாநுஷ்டாநத்திற்கும் பலப்ராப்திக்கும் ஸாமாநாதிகரண்ய நையத்யம் ஆவச்யகமென்று ப்ரதிஜ்ஞை பண்ணி அந்வய வ்யதிரேக வ்யாப்திகளைக் காட்டி அதை ஸ்தாபித்தாலொழிய நவீனர்களுக்கு ஸமீஹிதஸித்தியில்லை. இது அஸம்பாவிதமென்பதை இவர்கள் தாமே இசையவேண்டிற்றாய் வந்து முடிந்தது.

26. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதிகாரிவிபாகாதிகாரத்தில்,

> ''ஒரு மலையில் நின்றும் ஒரு மலையில் தாவும் ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்களைப் போலே பாஷ்யகாரர் ஸம்ஸாராதிலங்கநம் பண்ண அவரோடுண்டான குடல் துவக்காலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டானருளிச் செய்த பாசுரம்''

என்று ஸ்வாமிதேசிகனருளிச்செய்திருப்பதும் இங்கு அநுஸந்தேயம். சரணாகதி கத்யபாஷ்யத்தில் ''விபீஷணஸஹாகத ராக்ஷஸந்யாயேந'' என்று தேசிகனருளிச் செய்திருப்பதைக் கொண்டு 'எம்பெருமானாருடைய காலத்திலேயே யிருந்த தத்ஸம்பந்திகளுக்குத்தான் பேறு கிடைக்குமென்று இதனால் தெளிவாகிறது' என்று சிலர் கூறுவதுண்டு. இதற்குச் சொல்லுகிறோம். ''உத்பபாத கதாபாணிச் சதுர்ப்பிஸ் ஸஹ ராக்ஷஸை:'' என்று, விபீஷணாழ்வான் பெருமாளிடம் வந்துசேரப் புறப்பட்டபோது நான்கு ராக்ஷஸர்களோடுகூடக் கிளம்பினதாகச் சொல்லிற்று. அந்த நால்வரும் விபீஷணனைப்பின் செல்லுகையொழிய ஸ்ரீராமவிஷயீகாரமாகிற பேற்றுக்குடலாக வேறொன்றும் அனுட்டிக்கவில்லை யென்னும்போது, அந்த நால்வர்க்கு விபீஷ

ஞாழ்வானோடு ஸமகாலத்தில் ஸமதேசத்தில் இருப்பு தேறுகின்றது; ஆகவே ஸ்ரீ பாஷ்யகாரரோடு ஸமதேச காலங்களில் வாழ்ந்தவர்களுக்கு மாத்திரமே தத்ஸம்பந்த நிபந்தநமாகப் பேறு கிடைக்கும்—என்று பிறர் வாதிப்பது. இதுமருள். இங்கு விஷயம் என்னவென்றால், சரணாகதியை யநுஷ்டித்தவன் விபீஷணன்; அவனோடு கூட வந்த நால்வர் கூடவருகை யென்கிற காரியந்தவிர வேறொன்றும் அநுஷ்டியாதவர்கள். 'அநுஷ்டித்தவர்களுக்குத்தான் பலனுண்டு, அநுஷ்டியாதவர்களுக்குப் பலன் இல்லை' என்னும் வாதத்தை மறுப்பதற்காகவே இவ்விஷயம் தேசிகனாலெடுத்துக் காட்டப்பட்டது. உபாயமென்று பேரிடத்தக்கதானவொன்று எந்த வ்யக்தியினிடத்தில் இல்லையோ அந்த வ்யக்திகளுக்குங்கூடவா பேறு கிடைத்துவிடும்? என்று சங்கிக்குமவர்களுக்குச் செவ்வனே ஸமாதாநம் பிறப்பிக்கைக்காகவாயிற்று விபீஷண ஸஹாகதராக்ஷஸர்களை தேசிகன் எடுத்துக்காட்டினது. திண்ணமாகப் பலன் கண்டவிடத்தையன்றோ பிராமாணிகர்கள் த்ருஷ்டாந்தமாக எடுத்துக் காட்டுவர்கள். விபீஷணனோடு மிகவும் வ்யவஹிதமான ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் பெருமாள் பலன் அளித்திருக்கலாமாயினும் அது ப்ரமாணாரூடமாகக் காணாமையாலும், ப்ரமாணப்ரதிபந்நமானதைக் காட்டினாலல்லது சங்காகளங்கித ஹ்ருதயர்களுக்கு ஸமாதானம் பிறவாதாகையாலும் கண்ணழிவற்ற ப்ரமாண ஸித்தமானதைக் காட்டினார் தேசிகன். ஸாக்ஷாத் சரணாகதர்களோடு தத்ஸம்பந்திகளோடு வாசியற அனைவர்க்கும் பேறு தப்பாதென்னுமிடத்தை தேசிகன் பல த்ருஷ்டாந்தங்களாலும் பல ப்ரமாணங்களாலும் திடப்படுத்தியிருக்கிறானன்றோ.

27. மணவாளமாமுனிகளும் யதிராஜ விம்சதியில் "காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதி பாபக்ரியஸ்ய சரணம் பகவத்க்ஷமைவ, ஸா ச த்வயைவ கமலா ரமணேர்த்திதா யத் க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர பவச்ச்ரிதாநாம்." என்கிற ஒரு ச்லோகத்தினால் ஸாரமாக ஒரே வார்த்தையிலருளிச்செய்து தலைக்கட்டினாராயிற்று. திருவாய்மொழியில்(6-10-11)*திருவேங்கடத்துக்கிவைபத்தும் பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரியவானுள் நிலாவுவரே* என்றவிடத்து ஈட்டில்—

> "இவர் பண்ணின ப்ரபத்தியே நமக்குமெல்லாம்; தனித்துவேண்டா; இப்பாசுரத்தைச் சொல்லிப் பலத்திலே அந்வயிக்குமத்தனை. நற்கன்றுக்கிரங்கினது தோற்கன்றுக்கு இரங்குமாபோலே இவரை நினைத்து இப்பத்துங் கற்றார் பக்கலிலும் ஈச்வரன் ப்ரஸந்நனும். ஸ்ரீவிபீஷணாழ்வானோடு வந்த நால்வர்க்கும் அவன் பண்ணின ப்ரபத்தியே அமைந்ததிறே. 'இவனுடையவன்' என்று எதிர்த்தலைக்குத் தோற்றவிருக்கு மத்தனையே வேண்டுவது."

என்றருளிச்செய்துள்ளது காண்க.

28. இப்படி ஆழ்வார் ஸம்பந்தமும் எம்பெருமானார் ஸம்பந்தமும் நமக்குக் குறைவற்றிருக்க நாமொரு ஸதாசார்யனைத்தேடி ஆச்ரயிப்பது எதற்காக? என்று சிலர் கேட்பது மந்தசோத்யம். யதிராஜஸப்ததியில் "அநுகல்பபூத முரபித்பதம் ஸதாம்......சரணம் யதீந்த்ரசரணம் வ்ருணீமஹே." என்றருளிச் செய்த ச்லோகத்தின் பொருளை அனைவருமறிவரே. எம்பெருமானார் திருவடிகளைப் பணிவதுதான் முக்க்ய பக்ஷமென்றும் எம்பெருமான் திருவடிகளைப் பணிவது கௌணபக்ஷமென்றும் முக்தகண்டமாகப் பேசினாராயிற்று. "ஸம்பவதி முக்க்யகல்பே கௌணகல்பாவலம்பநம் அந்யாய்யம்—முக்க்ய பக்ஷம் ஸம்பவிக்கும்போது கௌணபக்ஷத்தை யவலம்

பிப்பது அடாது'' என்கிற நியாயம் கவிதார்க்கிக கேஸரி அறியாததன்றே. அறிந்து வைத்து, கௌணபக்ஷமான பகவச்சரண சரணவரணத்தைப் பலபல ஸ்தோத்ர க்ரந்தங்களினால் ஏன் பண்ணி நின்றார்? என்று கேட்டால் என்சொல்லுவது? நற்போது போக்குக்காகவத்தனை என்பது தவிர வேறு பணிக்க முடியாதன்றோ. ''புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்யார்ப்பகாதி:'' என்றும் ''ச்ருத்வா வரம் தததநு பந்தமதாவலிப்தே'' என்றுமுள்ள இரண்டு ஸ்ரீஸூக்திகளே இவ்விஷயத்தில் நிதியானவை. சரணாகதிகத்யத்தின் முடிவில் ''நிஸ்ஸம்சயஸ் ஸுகமாஸ்வ'' என்றவிடத்திற்கு பாஷ்யமிட்டருளா நின்ற தேசிகன்—

> ''ஏதேந அநாதிகாலமாஜ்ஞாதிலங்கநமூல பகவதப்ரஸாதேந ஸம்ஸரதோ மே பகவத்க்ருபாமூல ஸதாசார்யாங்கீகாரேண த்வயோச்சாரணாநூச்சாரண பூர்வக-ஸ்வரக்ஷாபரந்யாஸே ஸித்தே, ப்ரஸாதநேஷு அஸ்மாதப்ப்யதிகஸ்யாபாவாத் ஸ்வீக்ருதபர: ச்ரிய:பதிர்நாராயண: காலத்ரயவர்த்திந: ஸர்வாந் அப்ரஸாதஹேதூந் யதார்ஹம் க்ஷாந்த்வா ஸ்வயமேவ ஸ்வார்த்தமேவ மாம் ஸ்வஜ்ஞாநதர்சந ப்ராப்த்யாதிப்ரதாநேந ரக்ஷதிதி விச்வஸ்தோ நிர்ப்பரோ நிர்ப்பய: ஸந்துஷ்டோ பவேதி நிகமிதம் பவதி.''

என்றருளிச் செய்திருக்கிறார். ரஹஸ்யத்ரயஸார — க்ருதக்ருத்யாதிகாரத்தில் ''ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணாநூச் சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்தபின்பு சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே'' என்று தமிழிலருளிச் செய்தது தன்னையே ஸம்ஸ்க்ருதத்திலும் ஸுவிசதமாக வருளிச்செய்தாராயிற்று. ஸ்வாமியின் சரணாகதி கத்யத்திற்கு பாஷ்யம் செய்தருளுமிடத்து ''பகவத்க்ருபாமூல ஸதாசார்யாங்கீகாரேண த்வயோச்சாரணாநூச்சாரண பூர்வக ஸ்வரக்ஷாபரந்யாஸே ஸித்தே'' என்கிற இந்த வாக்யம் எதற்காக விந்யஸ்தமாயிற்றென்பதை விமர்சிக்கவல்லார்க்கு அத்ருஷ்டார்த்தாநுஷ்டானமென்று நடந்துவருகிற வொரு நாடகம் அத்யந்த நவீநமும் ஆதாரமற்றதும் என்பது நெஞ்சிலே நன்கு பதியும்.

——::——

29. நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் இன்னமும் சில அனுஷ்டானங்களைப் பற்றி ப்ரமாணோபபத்திகள் காட்டவேண்டியவையுண்டு. ஜயந்திகளில் உத்ஸவாந்தத்தில் பாரணை என்பதுபோன்ற விஷயங்களாம் அவை. அத்தகைய அநுஷ்டானங்கள் இதர ஸம்ப்ரதாயங்களிலும் ஏகதேசிகளால் தழுவப்பட்டுள்ளனவாதலால் விசேஷித்து இங்கு நாம் சிரமங்கொள்ளவேண்டிய ஆவச்யகதை யில்லையென்று நிற்கின்றோம்.

30. மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில்— ''ஆசாரியர்கள் அனைவரும் முன்னாசரித்த, ஆசாரந்தன்னை யறியாதார்—பேசுகின்ற, வார்த்தைகளைக்கேட்டு மருளாதே பூருவர்கள், சீர்த்த நிலைதன்னை நெஞ்சே சேர்.'' என்றருளிச்செய்துள்ள பாசுரத்தை நம்மவர்களுக்கு நினைப்பூட்டி நிற்போம். ... *



ஸ்ரீரஸ்து.

# — முடிவுரை —

## அடியேன்செய்யும் விண்ணப்பம்

அன்புமிக்க ஆரியர்காள் !

ஸ்ரீலோகாசார்ய ஸித்தாந்தஸாரமென்னும் இந்த நூல் தமிழ்ப் பாஷையில் மட்டுமன்றிக்கே ஸம்ஸ்க்ருத பாஷையிலும் தெலுங்கு பாஷையிலும் எனது ஸம்ஸ்க்ருத ஆந்த்ர பத்ரிகைகளிலும் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது. நமது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த ஸகல ஆசாரியர்களினுடையவும் ஸ்ரீஸூக்திகளினுல் தேறியுள்ள ஸித்தாந்தமே இதில் அவரவர்களின் ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டி விளக்கப்பட்டுள்ளது. பலவாண்டுகட்குமுன்பு "தென்ஞசார்ய ஸம்பிரதாயம்" என்னும் பெயரால் ஒரு நூல் வெளியிட்டிருந்தோம். அது வெகுநாளாகவே துர்லபமாய்விட்டது. அதன்பிறகு ஸத்ஸம்ப்ரதாயார்த்தஸாரநிதி யென்னும் நூலைச் சிறிது விரிவுபடுத்தி வெளியிட்டிருந்தோம். அதுவும் ஏழெட்டுவருஷகாலமாக துர்லபமாகிவிட்டது. அதில் சில விஷயங்களைத்தவிர்த்தும் சில புதிய விஷயங்களைச் சேர்த்தும் ஸ்ரீலோகாசார்ய ஸித்தாந்தஸாரமென்கிறவிந்நூல் வெளியிடப்பட்டதிப்போது.

ஸ்ரீராமாநுஜன் 285ல் பதிப்பிக்கத் தொடங்கப்பட்டவிது இப்போது 288ல் பூர்த்தியடைந்ததாயிற்று. ஏற்கனவே மாதந்தோறும் பத்ரிகைபெற்றவர்கள் பாரங்களைப்பிரித்தெடுத்துத் தனிப்புத்தகமாக பயிண்டு செய்வித்துக் கொள்ளலாம். கீழ் ஸஞ்சிகைகளைப் பெருதவர்கள் தனிப்புத்தகமாகப் பெற விரும்பினுல் இரண்டு ரூபா (M. O.) அனுப்பிப் பெறலாம். ஸம்ஸ்க்ருதபாஷையிலும் தெலுங்கு பாஷையிலும் பிரசுரிக்கப்பட்டவிதனைப் பெறவிரும்புமவர்களும் அப்படியே.

இங்ஙனம்,

**P. B. அண்ணங்கராசாரியர்.**

# ஸ்ரீமான் பந்தமலி A. V. கன்னைய நாயுடுவின் அறுபதாண்டு நிறைவு விழா



(12–8–72)

சென்னையில்வாழும் இப்பெரியாரை அறியாதாரில்லை. ஸ்ரீபெரும்பூதூரில் விளங்கும் புஷ்பால கன்னைய நாயுடு தர்மசாலைக்கும் தரும ஸ்தாபனத்திற்கும் நிர்வாகத் தலைவர் இப்பெரியார். அதுவன்றியும் ஸ்ரீகாஞ்சி யதோக்தகாரி பெரும்பெருமான் ஸந்நிதியில் அனாதிகாலமாக நடைபெற்றுவரும் தையில் [illegible]கத் திருநாளை இருபது வருடங்களுக்குமேலாகத் தமது உபயமாய் வெகு சிறப்பாக





நடத்திவருபவர் இப்பெரியார். பரம பாகவத சிகாமணியும் பக்த ரத்னமுமான இவர்க்கு நேற்று திருவாடிப்பூரத்திற்கு மறுநாள் உத்தர பங்குனி நக்ஷத்திரத்தில் அறுபதாண்டு நிறைவு விழா ப்ராப்தமாயிற்று. அதனைக் காஞ்சீயில் நம்பிள்ளை ஸன்னிதியில் நடத்த உத்தேசித்து. முன்னிரண்டுநாள் அத்யாபக ஸ்வாமிகள் பதின்மரைக்கொண்டு திருவாய்மொழியாயிரம் ஸேவாகாலம் நடத்தி நக்ஷத்திரத்தன்று திருமங்கலியதாரணமும் சாத்துமுறையும் விசேஷ ததீயாராதனமும் பூரி தக்ஷிணையுமாகி வெகு சிறப்பாகத் தலைக்கட்டிற்று.

